## மொழிக்கு மொழி தித்திக்கும்

# மூவர் தமிழ் மாலை

மாலை—8 15175




உரையாசிரியர்:
ஆங்கீரஸ S. வேங்கடேச சர்மா
(சங்கரனடிமை)

# மொழிக்கு மொழி தித்திக்கும்

# மூவர் தமிழ் மாலை

## சம்பந்தர், அப்பர், சுந்தரர் அருளிச்

## (செய்த தேவாரத் திருப்பதிக வெளியீடு)

பன்னிரு திருமுறைகளில் முதல் ஏழு திருமுறைகளான தேவாரத் திருப்பதிகங்களை பொழிப்புரை, விசேடவுரை, பதிக வரலாறு, தலவரலாறு, புராண வரலாறு முதலிய உரை விசேடங்களுடன் 108 தமிழ் மாலைகளாகப் பிரசுரித்துச் சிவபெருமானின் 108 திருநாமங்கள் ஒவ்வொன்றுக்கும் ஒரு தமிழ் மாலையாகச் சமர்ப்பிக்கும் இந்த திட்டத்தில் இத்துடன் எட்டு தமிழ் மாலைகள் வெளிவந்துள்ளன. விலை விவரம்:

| | | |
|---|---|---|
| முதல் ஆறு மாலைகள் ஒவ்வொன்றும் | ... | 2-00 |
| ஆறு தமிழ்மாலைகளும் சேர்த்து | ... | 10-00 |
| 7-வது தமிழ் மாலை முதல் | | |
| ஒவ்வொரு தமிழ் மாலையும் | ... | 3-00 |
| ஒவ்வொரு ஆறு தமிழ் மாலைகளும் | ... | 15-00 |
| 1 முதல் 108 தமிழ் மாலைகளுக்கும் | | |
| முன்பண உதவிச் சலுகை விலை | ... | 158-00 |

சலுகை விலை முன்பணமாகச் செலுத்தப்பட வேண்டும். ஒரு ஆண்டுக்குள் தவணைகளாகவும் செலுத்தலாம்.

முன்பணம் கிடைத்தவுடன் இதுவரை பிரசுரமான தமிழ் மாலைகள் உடனடியாக அனுப்பப்பட்டு மற்றவை பிரசுரமானதும் உடனுக்குடன் அனுப்பி வைக்கப்படும்.

உரையாசிரியர்—பதிப்பாசிரியர்
**ஆங்கீரஸ S. வேங்கடேச சர்மா**
5, டெலிபோஸ்ட் காலனி குறுக்குத் தெரு
மேலமாம்பலம், சென்னை-600033.

உ
சிவமயம்
சிவனுண்டு பயமில்லை

# மொழிக்கு மொழி தித்திக்கும்
# மூவர் தமிழ் மாலை

(சம்பந்தர், அப்பர், சுந்தரர் அருளிச் செய்த தேவாரத் திருப்பதிக வெளியீடு)

## மாலை—8

உரையாசிரியர் :
சிவபுராண ஞானபூஜகர், சாஸ்த்ர பிரசார பூஷணம்,
சிவபுராணக் காவலர், சிவபுராணச் சக்கரவர்த்தி
ஆங்கீரஸ சு. வேங்கடேச சர்மா
(சங்கரன் அடிமை)



வெளியீடு : 11—8—1980

பிரசுரம் :
ஆங்கீரஸ சு. வேங்கடேச சர்மா
5, டெலிபோஸ்ட் காலனி குறுக்குத் தெரு,
மேலமாம்பலம், சென்னை-600 033.

 1980 [விலை ரூ. 3-00

உ

# விநாயகர் துதி



திருச்சிற்றம்பலம்

பிடியதன் உருஉமை கொளமிகு கரியது
வடிகொடு தனதடி வழிபடும் அவரிடர்
கடிகண பதிவர அருளினன் மிகுகொடை
வடிவினர் பயில்வலி வலமுறை இறையே.

திருச்சிற்றம்பலம்

—திருஞானசம்பந்தர்




உ

சைவ சமயாசாரியர்

# நால்வர் துதி






| | | | |
|---|---|---|---|
| திருஞான சம்பந்தர் | திருநாவுக் கரசர் | சுந்தர மூர்த்திகள் | மாணிக்க வாசகர் |

பூழியர்கோன் வெப்பொழித்த புகலியர்கோன் கழல் போற்றி
ஆழிமிசைக் கல்மிதப்பில் அணைந்தபிரான் அடிபோற்றி
வாழிதிரு நாவலூர் வன்றொண்டர் பதம் போற்றி
ஊழிமலி திருவாதவூரர்திருத் தாள்போற்றி

சொற்கோவும் தோணிபுரத் தோன்றலும் நம்சுந்தரனும்
சிற்கோல வாதவூர்த் தேசிகனும்—முற்கோலி
வந்திலரேல் நீறெங்கே மாமறை நூல் தானெங்கே
எந்தைபிரான் ஐந்தெழுத்தெங் கே.

# திருஞானசம்பந்தர்



காழியர் தவம், கவுணியர் தனம்,
கலைஞானத்து ஆழிய கடல்,
அதனிடை அமுது, வானோர் தனிநாதன்
திருவருள்பெற்ற
திருஞானசம்பந்தர்

5-12



# ஸமர்ப்பணம்

## ஓம் ஸ்ரீ கபர்தினே நம:

சிவபிரானது 108 திருநாமங்களுள் **சடைமுடியினையுடையவன்** எனப் பொருள்படும் **கபர்தி** என்பது எட்டாவது திருநாமமாகும். கங்கையின் வெள்ளத்தினைச் சடையில் தாங்கி அதன் செருக்கடக்கினவன், சடையின் முடிச்சை யுடையவன், சடைமுடிகளையுடைய முனிவர்களின் வடிவமாயிருப்பவன், அவர்கட்கெல்லாம் வழிபடும் தெய்வமாயிருப்பவன் என்பன போன்ற பொருள்கள் இப்பெயரால் பெறப்படுகின்றன. சடைமுடி ஞானத்தின் அடையாளம். சிவபிரானுக்கேயுரிய தனிச் சிறப்படையாளம். சிவபிரானே முனிவர்க்கெல்லாம் மேலாய பெருமுனிவர். **விச்வாதிகோ ருத்ரோ மஹரிஷி**: என்று சிவபெருமானை வேதம் புகழ்கின்றது. திருப்பனந்தாளில் செஞ்சடையப்பர் என்றே இறைவர் வழங்கப்படுகிறார். அப்பதிகமடங்கிய இந்த எட்டாவது தமிழ் மாலையினை **ஓம் கபர்தினே நம**: என்ற இந்த எட்டாவது மந்திரத்தினால் அருச்சித்து இதனைப் பெருமானுக்கு அணிவிக்கும் நற்பேறு பெறுகின்றேன்.

ஆங்கீரஸ வேங்கடேச சர்மா

---

# பொருளடக்கம்

சிவமயம்

சிவனுண்டு பயமில்லை

# உரையாசிரியர் பணிவுரை

திருச்சிற்றம்பலம்

**இரவும் பகலும்நின் பாதத் தலர்என் வழிமுழுதும்**
**பரவும் பரிசே அருளுகண் டாய்இந்தப் பாரகத்தே**
**விரவும் பரமத கோளரி யேகுட வெள்வளைகள்**
**தரளம் சொரியும் கடல்புடை சூழ்ந்த தராய்மன்னனே.**

திருச்சிற்றம்பலம்

—ஆளுடைய பிள்ளையார் திருவந்தாதி: 4
(11-ம்திருமுறை)

இந்தப் பாரகத்தே விரவும் பரமத கோளரியே என நம்பியாண்டார் நம்பிகளால் துதிக்கப்பட்ட பூந்தராய் (சீகாழியின் பெயர்களில் ஒன்று) மன்னனாகிய திருஞான சம்பந்தப்பெருமானார் திருப்புறம்பயம், திருச்சேய்ஞலூர், திருப்பனந்தாள், திருப்பந்தணைநல்லூர், திருஓமமாம் புலியூர் ஆகிய திருத்தலங்களைத் தரிசித்துப் பாடிய ஐந்து திருப்பதிகங்கள் இந்த எட்டாவது தமிழ்மாலையில் அடங்கி யுள்ளன. இதனைச் சிவபெருமானுக்குச் சூட்டி அருள்பிர சாதமாக சிவநேயர்கட்கு வழங்கும் பேறு பெற்றதில் பெரு மகிழ்ச்சியினை அடைகின்றேன். ஏழாவது மாலைக்குப்பிறகு ஐந்து மாதங்கள் கழித்து இம்மாலை வெளிவருவது மன வருத்தத்தையளித்தாலும் சிவநேசவாசகர்கள் இதனை ஆவலோடு எதிர்பார்த்திருப்பது பெரிதும் மனநிறைவினை அளிக்கின்றது. இந்த ஆண்டு முடிவுக்குள் குறைந்த பட்சம்

இன்னும் இரண்டு மாலைகளையாவது இறைவனுக்கு அணி விக்க வேண்டும் என்ற உறுதியினை மேற்கொள்ளுகின்றனன்.

## பதிக உரையமைப்பு

சென்ற தமிழ் மாலையில் குறிப்பிட்டபடி பல சிவநேசர் களின் விருப்பத்துக்கிணங்கி அடுத்த தமிழ் மாலையிலிருந்து பதிகத்தின் ஒவ்வொரு பாடலுக்கும் அதன் கீழேயே உரை அமைக்கப்படும் என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன். இம்முறையின்படி பதிகவரலாறு முதலிலும், அதன்பின் பதிகம் ஒவ்வொரு பாடலும் உரையுடனும், அதன்பின் தலத்துச் சுவாமி – அம்பிகை பெயரும் அமைக்கப்படும்.

## நன்றியுரை

வழக்கம்போல நமது ஆதரவாளர்கட்கு நன்றி செலுத்து வதுடன் திருப்புறம்பயத்துத் திருப்பதிகத்தில் அடியேனுக்கு எழுந்த சில ஐயங்களைத் தெளிவுபடுத்திய பேராசிரியர் திரு. மறை. திருநாவுக்கரசு, புலவர் திரு. பருத்தியூர் கு சந்தானராமன் ஆகிய பேரறிஞர்கட்கும் அடியேனது நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

அடியேனது திருமுறைப் திருப்பணியினை ஊக்குவித்து ரூபாய் நூறு உதவியும், அன்புடன் பரிந்துரை வழங்கியும், மேலும் ஒல்லும் வகையாலெல்லாம் ஆதரவளிககவும் முன் வந்துள்ள பேராசிரியர் மறை. திருநாவுக்கரசு அவர்களுக்கு எனது மனமார்ந்த நன்றியினைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

## முடிவுரை

நமது தமிழ் மாலைகள் மிகவும் தாமதமாக வருவதில் பல அன்பர்கள் கவலைப்படுவது அடியேன் அறியாததல்ல. விரைவில் ஒரே சமயத்தில் இரண்டு தமிழ் மாலைகள் வெளி வரக்கூடிய நற்காலத்தையும் எதிர்பார்ப்போமாக. "முன்ன **வனே முன்னின்றால் முடியாததும் உளதோ**" என்ற சேக்கிழார் பெருமானின் தெய்வவாக்கும் பொய்க்குமோ?

சிவம்

அன்பே சிவம்

மறைமலையடிகளா மகனார், ''திருமுறைச் செல்வர்'' ''சித்தாந்த தினகரன்'', தூத்துக்குடி வ. உ. சி கல்லூரி ஓய்வு பெற்ற தமிழ்ப் பேராசிரியர். வித்துவான்

# மறை. திருநாவுக்கரசு அவர்கள்

## அன்புடனளித்த பரிந்துரை

'ஈபவர்க்கு அருளும் வைத்தார்'' (அப்பர்)
''செல்வத்துப் பயனே ஈதல்'' (புறநானூறு)
''நால்வர் பொற்றாள் நம் உயிர்த்துணையே''
(சைவ எல்லப்ப நாவலர்)

அம்மையப்பராம் சிவபெருமான் நாம் உய்ய—வாழ—நன்னெறி நின்று இன்புறத் தேவாரமாம் தமிழ்மறையினை மூவர்கள் (ஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர்) ஆகிய தெய்வச் சான்றோர்களின் மூலம் அருளிச் செய்தான். அந்த அருளாளர்கள் அருளிய அருந்தமிழ்ப் பாடல்களின் பொருளை உலகம் அறிந்து வாழ்வாங்கு வாழப் பொழிப்புரை, குறிப்புரை, விளக்கவுரை, சிறப்புரைகளை இனிய—எளிய - நல்ல தீந்தமிழில் வழங்குகின்றார் மாபெரும் சிவநேசர் ஆங்கீரஸ சர்மா. எளிய மக்களும் படித்துப் பெரும் பயன் அடையலாம். எவ்வகையான பயனையும் எதிர்பாராமல் சிவபத்திமை பரவுதல் வேண்டும் என்னும் பெருங் குறிக்கோள் ஒன்றையே திருவுள்ளத்திற்கொண்டு அரும் பணியாற்றும் இப்பேரருளாளர் மூவர் தமிழ் மாலைத் தொகுதிகளை வாங்கி உய்யுமாறு சிவநேயர்களை வேண்டுகின்றேன். இம்மாலைத் தொகுதிகளின் விலை அடக்க விலைக்குங் குறைவான விலையேயாகும் என்பதனை நல்லன்பர்கள் அறிவார்கள். ஆதலின் அவர்களும், என்பேரன்பிற்குரிய

நண்பர்களும், அன்பர்களும், புரவலர்களும், கொடையாளர்களும், சான்றோர்களும், புலவர்களும், சிவபூசைச் செல்வர்களும், ஓதுவார்களும் இம்மாலைத் தொகுதிகள் யாவும் (108) வெளிவர வாரி வாரி வழங்கிப் பெற்ற செல்வத்தின் பயனைப் பெற்று உய்யுமாறு அனைவரையும் அடி பணிந்து வேண்டுகின்றேன்.

சவகர் நகர், அகரம்,
சென்னை—600082.
17-5-1980

இங்ஙனம்
ஆங்கீரசன் அடிமை
மறை. திருநாவுக்கரசு.

குறிப்பு: இத்துடன் "மாலை" வெளியீட்டிற்காக அடியேன் காணிக்கை ரூபாய் நூறு அனுப்பியுள்ளேன். ஏற்றருள்க.—ம. தி

---

## விலை விகிதம்

**முதல் ஆறு தமிழ் மாலைகள் :**

| | | |
|---|---|---|
| ஒவ்வொரு மாலையும் தனிப்பிரதி | ... ரூ. | 2-00 |
| முதல் ஆறும் சேர்த்து சலுகை விலை | ... ரூ. | 10-00 |

**ஏழாவது தமிழ் மாலை முதல் :**

| | | |
|---|---|---|
| ஒவ்வொரு மாலையும் தனிப்பிரதி | ... ரூ. | 3-00 |
| ஒவ்வொரு ஆறு தமிழ் மாலைகளும் சலுகை விலை | ... ரூ. | 15-00 |
| 108 தமிழ் மாலைகளுக்கும் முன்பண சலுகை விலை | ... ரூ. | 158-00 |

**சலுகை விலை முன்பணமாகச் செலுத்தப் படவேண்டும்.**

ஆங்கீரஸ சு. வேங்கடேச சர்மா
(உரையாசிரியர்—பதிப்பாசிரியர்)

உ

சிவமயம்

சிவனுண்டு பயமில்லை

# இப்பகுப்பில் வந்துள்ள தலங்களின் விசேடங்கள்

(சுருக்கம்)

உரையாசிரியர் எழுதியது

## 1. திருப்புறம்பயம்

திருப்புறம்பயம் என்பது தஞ்சை மாவட்டம் காவிரிக்கு வடகரைத் தலங்களில் 46வது தலம் ஆகும். இது கும்பகோணத்திற்கு வடமேற்கே 8 கி. மீ தொலைவில் மண்ணியாற்றின் வடகரையில் உள்ளது. முன் தமிழ்மாலையில் கூறிய திருவிசயமங்கை என்னும் தலத்தினின்று கிழக்கே சுமார் 2 கி. மீ தொலைவில் உள்ளது. ஒரு ஊழிப் பிரளய காலத்தில் ஊழிப் பெருவெள்ள நீர் உள்ளே வராமல் தடைபட்டு நின்றமையால் புறம்பயம் எனப் பெயர் பெற்றது என்பர். (புறம்—பக்கம்; பயம் - நீர்). இதற்கேற்ப இவ்வூர்ப் பிள்ளையார் பிரளயங்காத்த பிள்ளையார் என வழங்கப்படுதலுங் காண்க. இப்பிள்ளையாரின் திருவுருவம் சந்தன நிறம் பொருந்திய ஒருவகைக் கல்லால் அமைந்த சுயம்பு மூர்த்தி என்று சொல்லப்படுகிறது. இவர் திருமேனியில் எங்கும் சங்கு, இப்பி போன்ற கடல்படு பொருள்கள் காணப் படுகின்றன. இவற்றைக் கொண்டு வருணன் இவரைப் பூசித்ததாகத் தலபுராணம் கூறுகிறது.

சனகாதியர்க்கு இறைவன் இத்தலத்தில் அறமுறைத்த செய்தியைப் பதிகத்தில் காணலாம். காவிரிப்பூப்பட்டினத்தி லிருந்து தான் திருமணம் செய்து கொள்ள வேண்டிய தனது

சகோதரி மகளை அழைத்துக் கொண்டு வந்த வணிகன் ஒருவன் அரவு கடித்து இறந்து போகச் சிவபெருமான் அவனுக்கு உயிர் கொடுத்து அப்பெண்ணையும் திருமணம் புரிவித்தார். பின்னர் அப்பெண் மதுரையில் தனது கணவனின் மூத்த மனைவியினால் இத்திருமணம் பற்றி ஐய மெழுப்பிப் பழிக்கப்பட்டபோது இறைவனார் வன்னிமரம், கிணறு, மடைப்பள்ளி இவற்றுடன் சென்று சான்று பகர்ந்த தாகத் தலபுராணங் கூறுகிறது. இவ்வரலாறு பரஞ்சோதி திருவிளையாடற் புராணத்தில் திருஞானசம்பந்தர் வணிக னுக்கு உயிர் கொடுத்து வன்னி, கிணறு இலிங்கம் ஆகியவை சாட்சியாக அவர்கட்குத் திருமணம் செய்து வைத்ததாயும், பின்னர் மூத்த மனைவி சுமத்திய பழியினைத் தீர்க்க இப் பெண்ணின் வேண்டுகோட்கிணங்கி வன்னி, கிணறு, இலிங்கம் ஆகிய மூன்றும் மதுரைக் கோயிலில் இத்திருமண சாட்சியாக வந்தன என்றும் தலபுராணத்துடன் சிறிது மாறுபட்டுக் கூறப்படுகிறது. விரிவு வேண்டுவோர் பரஞ் சோதி திருவிளையாடற்புராணம் 64வது திருவிளையாடல் வன்னியுங்கிணறும் இலிங்கமும் அழைத்த படலத்தில் காண லாம். சிலப்பதிகாரத்திலும் "வன்னி மரமும் மடைப்பள்ளியுஞ் சான்றாக முன்னிறுத்திக் காட்டிய மொய்குழலாள்" என்று இச்செய்தி கூறப்பட்டுள்ளது.

இக்கோயில் பணிப்பெண் ஒருத்தி ஆதனூரில் உள்ள தன் காதல் கிழவனிடம் செல்ல ஒருநாள் மாலைப்பொழுதில் மண்ணியாற்றைக் கடக்க ஓடத்தில் செல்லும் போது, ஓடக் காரன் யாரும் இல்லாத நிலையையறிந்து அப்பெண்ணின் அணிகலன்களையும், கூறைகளையுங் கவர்ந்து கொண்டு அவளைக் கொன்று ஆற்றில் தள்ளிவிட்டதாகவும், அத்தீய வினைக்கேற்ப ஆற்றைக் கடப்பதற்குள் அவனும் ஆற்றில் தவறி விழுந்து இறந்து விட்டானெனவும் தலபுராணம் கூறுகிறது. இவ்வரலாற்றை உட்கொண்டுதான் சுந்தர மூர்த்தி சுவாமிகள் இவ்வூர்ப் பதிகத்தில். "குற்றொருவரைக்

கூறைகொண்டு கொலைகள் சூழ்ந்த களவெலாம், செற்றொரு வரைச் செய்த தீமைகள் இம்மையே வருந்திண்ணமே'' என்று அருளிச் செய்திருத்தல் வேண்டும்.

இத்தலத்துப் பெருமான் மதுரையில் சாட்சி பகர்ந்தமையால் சாட்சிநாதர் என்று வழங்கப்படுகிறார். தேவி கரும்படுசொல்லம்மை என்று வழங்கப்படுகிறார். இறைவர் பெயர் முன்பு திருப்புறம்பயநாதர் என்றே இருந்தது போலும்.

இத்தலத்து விருட்சம் புன்னை. இது முதல் பிராகாரத்தில் வடமேற்கில் உள்ளது. இது பற்றியே இத்தலம் புன்னாக வனம் என்றும் வழங்கப்பட்டது.

தீர்த்தம்: (1) பிரமதீர்த்தம்: இது இராஜகோபுரத்துக்கு வடகிழக்கில் உள்ளது. (2) சத்தசாகர தீர்த்தம்: இது பிரம தீர்த்தத்துக்குக் கிழக்கே நந்தவனத்தில் உள்ளது. பிரளய காலத்தில் அழிக்க வந்த ஏழு கடல்களும் இதனுள் அடங்கி யுள்ளன என்பது தலபுராணக் கூற்று. ஊரின் கிழக்கில் மண்ணியாறும் வடக்கே கொள்ளிடமும் ஓடுகின்றன.

சம்பந்தர், அப்பர், சுந்தரர் ஆகிய மூவர் பதிகமும் பெற்ற இத்தலத்துக்கு இதுவரை அச்சிடப்படாத தல புராணம், உலா முதலியவைகளும் புறம்பயமாலை,கரும்புமை மாலை ஆகிய நூல்களும் உள்ளனவாகத் தெரிகிறது. இவற்றை எவரேனும் அச்சிட்டு வெளிப்படுத்தினால் அது பெரும் சிவபுண்ணியமாகும்.

நாள்தோறும் திருக்கோயிலுக்கு விறகு கொணர்ந்து வந்த ஒரு ஆதிதிராவிட தொண்டருக்கு இறைவர் காட்சி யளித்து வீடுபேறு அருளிச்செய்ததாகவும், வருணன், மகத நாட்டு அரித்துவன் என்னும் மன்னன், விந்திய மலையரசன், துரோணர், இமயவரசன், விசுவாமித்திரர், சுக்ரீவன்

ஆகியோர் இத்தலத்தில் இறைவரை வழிபட்டுத் தமக்கு வேண்டிய வரங்களைப் பெற்றனர் என்றும் கூறப்படுகிறது.

இது மதுரை ஸ்ரீ திருஞானசம்பந்த சுவாமிகள் ஆதீனத்துக்குச் சொந்தமான கோயில். இவ்வாதீனத்தில் 291-வது குருமஹாசந்நிதானமாக எழுந்தருளியிருந்து அண்மையில் பரிபூரணம் எய்திய திருவருள் தவயோக **ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர ஸ்ரீ ஞானசம்பந்த தேசிக பரமாசாரிய சுவாமிகள்** அடியேனுக்கு அனுப்பியருளிய திருப்புறம்பயம் ஸ்ரீசாட்சிநாத சுவாமி கோயில் தலவரலாறு என்னும் நூலிலிருந்து இவ்வரலாற்றுச் சுருக்கம் அடியேனால் எழுதப்பட்டது. சிவநேயர்கள் படித்து இன்புறுவார்களென்று நம்புகிறோம்.

## 2. திருச்சேய்ஞலூர்

இது சோழநாட்டில் காவிரிக்கு வடகரையில் 41வது தலமாகும். இத்தலத்து அவதரித்த சண்டேசுர நாயனார் வரலாறு இத்தமிழ்மாலையில் தனியாகக் கொடுக்கப்பட்டுள்ளது. ஊர்ப்பெயர்க்காரணம் பதிகப் பொழிப்புரையில் 11வது பாடலுரையில் கண்டு கொள்க.

தற்காலம் சேங்கனூர் என வழங்கப்படும் இத்தலம் கும்பகோணத்திலிருந்து திருப்பனந்தாள் செல்லும் வழியில் சுமார் 15 கி. மீ. தொலைவில் உள்ளது. இறைவர் **சத்யகிரீசுவரர்** என்றும் தேவி **சகிதேவியார்** என்றும் வழங்கப்படுகிறார்கள். இத்தலத்துக்கு திருஞானசம்பந்தர் பதிகம் ஒன்று மட்டுமே உள்ளது.

## 3. திருப்பனந்தாள்

பனைமரத்தைத் தலவிருட்சமாக உடையதால் இத்தலம் திருப்பனந்தாள் என்று வழங்கப்படுகிறது. ஊரின் பெயர் திருப்பனந்தாள் என்றும் கோயிலின் பெயர் திருத்

தாடகையீச்சரம் என்றும் கூறுவர். திருஞானசம்பந்தர் தமது பதிகத்தில் இவ்விரண்டினையும் சேர்த்தே கூறியுள்ளார் தாடகை என்னும் ஒரு பெண்மணியால் பூசிக்கப்பட்டமை யால் தாடகையீச்சரம் எனப் பெயர் பெற்றதென்பர். (இத் தாடகை இராமயணத்தில் வரும் தாடகை அல்லள்).

இத்தலம் மாயூரம்--கும்பகோணம் இருப்புப் பாதையில் ஆடுதுறை என்னும் நிலையத்திலிருந்து வடக்கே சுமார் 10 கி. மீ. தொலைவில் உள்ளது. மாயூரத்திலிருந்து பேருந்து களும் உள்ளன.

இத்தலத்தில் தாடகை என்னும் பெண்ணுக்காக வளைந்தும், குங்கிலியக்கலைய நாயனுர்க்காக நிமிர்ந்தும் அருள் செய்தார் பரமர் என்பது மிகப் பிரசித்தம். "மாலை சாத்தும், தாடகை மானங்காப்பான் தாழ்ந்து பூங்கச்சிட்டு ஈர்க்கும், பீடுறு கலையன் அன்பின் நிமிர்ந்த எம்பிரான் ஊர் ஈதால்" எனப் பரஞ்சோதி முனிவர் தமது திருவிளையாடற் புராணம் அருச்சனைப் படலத்தில் இச்சிறப்பினைப் போற்றிப் பாடியுள்ளார். தாடகையீச்சரம் என்னும் கோயிலும் இதே ஊரில் உள்ள ஊருடையப்பர் கோயில் என்ற ஒன்றும் திருக்கயிலாய பரம்பரைத் திருத்தருமபுர ஆதீனத்துக்குச் சொந்தமாய் சைவமும் செந்தமிழும் செய்த தவப்பயனுன ஸ்ரீலஸ்ரீ மஹாசந்நிதானம் அவர்களால் சிறந்த முறையில் பரிபாலிக்கப்பட்டு வருகின்றன.

ஆதி குமரகுருபர சுவாமிகளது பரம்பரையாகப்பட்டத் தில் வீற்றிருந்து செந்தமிழும் சைவமும் சேர்ந்தினிது புரக்கும் தம்பிரான் சுவாமிகளைத் தலைவராகவுடைய காசி மடமும் இத்தலத்திலேதான் உள்ளது. இம்மடம் திருத் தருமபுரம் ஆதீனத்தின் ஞானபுத்திரமடம் என்று கூறுவர்.

இறைவர் பெயர் செஞ்சடையப்பர் என்பது பதிகத் திலும் வழங்கக் காணலாம். இறைவியார் பெரிய நாயகி என வழங்கப்படுவர். தலமரமான பனை மரம் முதல்

பிராகாரத்தில் இருக்கிறது. இத்தலத்துக்குத் திருஞான சம்பந்தர் பதிகம் மட்டுமே உள்ளது.

## 4. திருப்பந்தணைநல்லூர்

உமாதேவியார் ஆடிய பந்து வந்து அணைந்த ஊர் என்பதால் திருப்பந்தணைநல்லூர் எனப்பெயர் பெற்றது என்பர். தற்காலம் பந்தணநல்லூர் என்றும் பந்த நல்லூர் என்றும் மருவி வழங்கப்படுகிறது. தேவகன்னியர் களும் காமதேனுவும் வழிபட்டுப் பேறு பெற்றதாகக் கூறப் படுகிறது. தலத்து இறைவர் **பசுபதீசுவரர்** என்றும் இறைவி **காம்பன்ன தோளியம்மை** எனவும் வழங்கப்பெறுவர். தல மரம் – கொன்றை.

திருஞானசம்பந்தர் பதிகம் ஒன்றும், திருநாவுக்கரசர் பதிகம் ஒன்றும் பெற்றுள்ள இத்தலம் மாயூரம் - கும்ப கோணம் இருப்புப்பாதையில் குத்தாலம் இரயில்வே நிலயத்துக்கு வடமேற்கே 10 கி. மீ. தொலைவில் உள்ளது. முன்னர்க்கூறிய திருப்பனந்தாளினின்றும் வடகிழக்கில் 5 கி. மீ. தொலைவில் கொள்ளிடப் பேராற்றின் தென்கரை யில் உள்ளது.

## 5. திருஓமமாம்புலியூர்

சோழநாட்டில் காவிரி வடகரை 31 வது தலமான இது தற்காலம் திருஓமாம்புலியூர் என வழங்கப்படுகிறது. அந்தணர்களது வேள்விச் சிறப்பும், புலிக்கால் முனிவர் பூசித்துப் பேறு பெற்றதும் சேர்ந்து இப்பெயர் பெற்றது என்பர். இவ்வூர் அந்தணர் சிறப்பு பதிகம் முழுமையும் பேசப்பட்டிருத்தல் காண்க. புலிக்குப் பயந்த வேடனொரு வன் இக்கோயில் வில்வமரத்தின் மீதேறி இரவு முழுவதும் தூங்காது விழித்திருத்தற்பொருட்டு மரத்தின் இலைகளை ஒவ்வொன்றாகப் பறித்துப்போட, அவை மரத்தின் கீழிருந்த

சிவலிங்கப்பெருமான் மீதுவிழ, அச்செயலைச் சிறந்த பூசனை யாகப்பிரானுர் ஏற்றுக்கொண்டமையால் அச்சிவபுண்ணியங் காரணமாக அவ்வேடன் முத்தி பெற்ருன் எனக் கூறப்படும் வரலாறு பற்றியும் இவ்வூர் புலியூர் என்று வந்ததாகவுங் கொள்ளலாம். வடதளி என்று பதிகத்தில் இருப்பதால் முன்னர் இத்தலத்தில் வேறு ஒரு திசையிலும் ஒரு கோயில் இருந்திருத்தல் கூடும்.

இப்பதி முன்னர்க்கூறிய திருப்பந்தணை நல்லூரினின்றும் வடகிழக்கில் 5 கி. மீ. தொலைவில் கொள்ளிடக் கரைவழி ஆற்றைக் கடந்து அதன் வடகரையில் உள்ளது. கொள்ளி டத்துக்கு வடக்கே சிதம்பரம் – திருநாரையூர் - மன்னுர்குடி சாலைவழிச் சென்று மன்னுர்குடியிலிருந்து தென்கிழக்கில் சுமார் 3 கி. மீ. தொலைவிலும் இப்பதியைச் சென்ற டையலாம்.

திருஞானசம்பந்தர் பதிகம் ஒன்றும், திருநாவுக்கரசர் பதிகம் ஒன்றும் பெற்றுள்ள இத்தலத்தில் இறைவர் துயரந் தீர்த்தநாதர் என்றும் இறைவி பூங்கொடி நாயகி என்றும் வழங்கப்படுகிருர்கள். தீர்த்தம் - கொள்ளிடம்; தலமரம்- வில்வம்.

சிவம்

---

## மூர்த்தி, தலம், தீர்த்தம்

**மூர்த்திதலந் தீர்த்த முறையாய்த் தொடங்கினர்க்கோர்**
**வார்த்தைசொலச் சற்குருவும் வாய்க்கும் பராபரமே.**

—தாயுமானவர், பராபரக்கண்ணி : *156.*

ஆங்காங்கு எழுந்தருளியுள்ள பரசிவ மூர்த்தங்களிலும், பெருமானுர் எழுந்தருளியுள்ள திருத்தலங்களிலும், அங்கு உள்ள புண்ணிய தீர்த்தங்களிலும் பக்தியுடன் வணங்கி, வசித்து, படிந்து நீராடுவார்க்கு உண்மையான ஞான உபதேசஞ் செய்ய உத்தமமான குரு மூர்த்தி கிடைப்பர் என்பதாம். (ஓர் வார்த்தை—உபதேசம்.)

ஓ

சிவமயம்

சிவனுண்டு பயமில்லை



# மொழிக்கு மொழி இத்திக்கும் மூவர் தமிழ் மாலை—8

## திருஞானசம்பந்தர் அருளியவை

(தொடர்ச்சி)

## திருப்புறம்பயம்

பண்—இந்தளம்] திருவிராகம் [2-ம் திருமுறை

திருச்சிற்றம்பலம்

மறம்பய மலைந்தவர் மதிற்பரி சறுத்தனை
நிறம்பசுமை செம்மையொ டிசைந்துனது நீர்மை
திறம்பய னுறும்பொருள் தெரிந்துணரு நால்வர்க்கு
அறம்பய னுரைத்தனை புறம்பயம் அமர்ந்தோய். 1

விரித்தனை திருச்சடை அரித்தொழுகு வெள்ளம்
தரித்தனை யதன்றியும் மிகப்பெரிய காலன்
எருத்திற வுதைத்தனை இலங்கிழையொர் பாகம்
பொருத்துதல் கருத்தினை புறம்பயம் அமர்ந்தோய். 2

விரிந்தனை குவிந்தனை விழுங்குயி ருமிழ்ந்தனை
திரிந்தனை குருந்தொசி பெருந்தகையு நீயும்
பிரிந்தனை புணர்ந்தனை பிணம்புகு மயானம்
புரிந்தனை மகிழ்ந்தனை புறம்பயம் அமர்ந்தோய். 3

வளங்கெழு கடும்புன லொடுஞ்சடை யொடுங்கத்
துளங்கம ரிளம்பிறை சுமந்தது விளங்க
உளங்கொள அளைந்தவர் சுடுஞ்சுடலை நீறு
புளங்கொள விளங்கினை புறம்பயம் அமர்ந்தோய் 4

பெரும்பிணி பிறப்பினொ டிறப்பிலையொர் பாகம்
கரும்பொடு படுஞ்சொலின் மடந்தையை மகிழ்ந்தோய்
சுரும்புண அரும்பவிழ் திருந்தியெழு கொன்றை
விரும்பினை புறம்பயம் அமர்ந்த இறையோனே. 5

அனற்படு தடக்கையவ ரெத்தொழில ரேனும்
நினைப்புடை மனத்தவர் வினைப்பகையு நீயே
தனற்படு சுடர்ச்சடை தனிப்பிறையொ டொன்றப்
புனற்படு கிடக்கையை புறம்பயம் அமர்ந்தோய். 6

மறத்துறை மறுத்தவர் தவத்தடிய ருள்ளம்
அறத்துறை யொறுத்துன தருட்கிழமை பெற்றோர்
திறத்துள திறத்தினை மதித்தகல நின்றும்
புறத்துள திறத்தினை புறம்பயம் அமர்ந்தோய். 7

இலங்கைய ரிறைஞ்சிறை விலங்கலின் முழங்க
உலங்கெழு தடக்கைக ளடர்த்திடலு மஞ்சி
வலங்கொள எழுந்தவன் நலங்கவின அஞ்சு
புலங்களை விலங்கினை புறம்பயம் அமர்ந்தோய். 8

வடங்கெட நுடங்குண இடந்தவிடை யல்லிக்
கிடந்தவன் இருந்தவன் அளந்துணர லாகார்
தொடர்ந்தவ ருடம்பொடு நிமிர்ந்துடன் வணங்கப்
புடங்கருள்செய் தொன்றினை புறம்பயம் அமர்ந்தோய். 9

விடக்கொருவர் நன்றென விடக்கொருவர் தீதென
உடற்குடை களைந்தவ ருடம்பினை மறைக்கும்
படக்கர்கள் பிடக்குரை படுத்துமையொர் பாகம்
அடக்கினை புறம்பயம் அமர்ந்தவுர வோனே. 10

கருங்கழி பொருந்திரை கரைக்குலவு முத்தம்
தருங்கழு மலத்திறை தமிழ்க்கிழமை ஞானன்
சுரும்பவிழ் புறம்பயம் அமர்ந்ததமிழ் வல்லார்
பெரும்பிணி மருங்கற ஒருங்குவர் பிறப்பே 11

திருச்சிற்றம்பலம்

சுவாமி—சாட்சிநாதர்] [தேவி—கரும்படுசொல்லம்மை

**பதிக வரலாறு:**—திருவைகாவில் கோயில் கொண்ட கண்ணுதற் பெருமானைப் பணிந்து பதிகம் பாடிப் பரவிய பின்னர் திருஞானசம்பந்தப் பிள்ளையார் திருப்புறம்பயம் என்னும் தலத்தினை வந்தடைந்தனர். திருப்புறம்பயத்துக் கோயில் கொண்ட இறைவரைப்போற்றி செய்து நிறம்பயில் இசையுடன் பாடிய செந்தமிழ்ப்பதிகம் இதுவாகும்.

**பதிகப் பொழிப்புரை:**

*1.* திருப்புறம்பயம் விரும்பி எழுந்தருளிய பெருமானே! பாவச் செயல்களையே பயனாகக் கொண்டு போராடியவர்களான முப்புரத்தவருடைய மதில்களின் தன்மையினை அழித்தனை. பசுமை நிறம் செம்மை நிறத்தோடு இணைந்தது உனது நிறத்தின் தன்மையாகும். உறுதி தரும் பொருளைத் தெரிந்து அறிகின்ற சனகாதியர் நால்வர்க்கு அறமாகிய பயனை உரைத்தனை.

**மதிற்பரிசு:** பெயர்ந்து சென்று அழிக்கும் தன்மை.

அம்மை நிறம் பசுமையும், அப்பன் நிறம் செம்மையும் என்று இணைத்துக் கூறியதால் அம்மையப்பனாகிய திருவுருவைக் குறித்தனர்.

**திறம் பயனுறும் பொருள் தெரிந்து** என்பது திறம் என்பதெல்லாம் பயன்படும் மெய்ப்பொருளை உள்ளடக்கியனவே என்ற பொருட்பண்பும், **உணரு நால்வர்க்கு** என்றதனால் பெறுவோர் பண்பும் **அறம் பயனுரைத்தனை** என்றதனால் சிவ தருமமாகிற ஞானப் பயனின் பண்புமாம் என்றலுமாம். (இந்த விளக்கம் திரு C. K. சுப்பிரமணிய முதலியாரவர்களின் உரைக் குறிப்பில் கண்டது). திருப்புறம்பயத்தில் நால்வர்க்கு அறமுரைத்ததனை மாணிக்கவாசகப் பெருந்தகையாரும் தமது திருவாசகத்தில் போற்றியுள்ளனர். **''புறம் பயமதனில் அறம் பல அருளியும்''** (திருவாசகம்: கீர்த்தித் திருவகவல், வரி-90).

2. திருப்புறம்பயத்தில் வீற்றிருந்தருளிய பெருமானே! உனது அழகிய சடையினை விரித்தனை. ஊடுருவிக்கொண்டு பாய்ந்து வருகின்ற கங்கையின் வெள்ளத்தினை அச்சடையில் தரித்தனை. இதுவேயன்றி மிகவும் பெருமை பொருந்திய இயமனை மார்பு நெரியும் படி உதைத்தனை. விளக்கம் பொருந்திய அணிகலன்களையுடைய உமாதேவியாரை ஒரு பாகத்தில் அமர்த்தும் கருத்தினைக் கொண்டுள்ளனை.

**திருச்சடை**: தெய்வத்தன்மை பொருந்திய சடை எனலுமாம்.

உலகனைத்தையும் ஊடுருவிக் கொண்டு பெருவேகமுடன் பாய்ந்து வந்த கங்கையாற்றினைத் தரித்ததும், மிகப் பெருமையுடைய இயமனை உதைத்ததும் சிவபெருமானுர்க்கே உரிய ஆற்றல் மிகு செயல்களாதாலால் அவற்றைப் போற்றிப் பாடினுர் என்க.

**மிகப் பெரிய காலன்**: இயமனுக்குப் பெருமையாவது எல்லா உயிர்களையும் காலமறிந்து கவரும் தன்மையும் அதில் தளராத முயற்சியும் வலியுமாம்.

**இலங்கிழை**: விளங்கிய அணிகலன் எனப் பொருள்பட்டு அதனைத் தரித்த தேவியைக் குறிக்கும். அன்மொழித் தொகை என்பர் இலக்கண நூலார்.

3. திருப்புறம்பயத்தினை விரும்பி எழுந்தருளிய பெருமானே! நீ எங்குமாகி விரிந்தனை, விரிந்து நின்ற நின் தன்மையினை ஒடுக்கிக்கொண்டனை, உடல்களினின்றும் (சங்கார காலத்தில்) பிரிக்கப்பட்ட உயிர்களை மீண்டும் உடம்புகளில் புகுத்தினை. குருந்த மரத்தினை ஒடித்த பெருந்தகைமையினையுடைய திருமாலுடன் திரிந்தனை, அவனுடன் புணர்ந்தனை, பின்னர் பிரிந்தனை. பிணங்கள் புகுகின்ற சுடுகாட்டினை விரும்பினை, அங்கே மகிழ்ந்து ஆடினை.

இறைவரது படைத்தல் முதலிய ஐம்பெருந்தொழில்களையும் போற்றிப் பாடியது இத்திருப்பாடல்.

**விரிந்தனை:** இறைவரது எங்கும் நிறைந்த தன்மை அதாவது சர்வ வியாபகத்தைக் குறித்தது; அல்லது சிருட்டி என்னும் படைப்பினைக் குறித்ததாகவுங் கொள்ளலாம்.

**குவிந்தனை:** இது இறைவரது நுண்ணிய தன்மையினைக் குறித்தது; அல்லது ஒடுக்கம் என்ற சங்காரத்தினைக் குறித்ததாகவுங் கொள்ளலாம்.

விரிதலும் குவிதலும் ஈண்டு வியாபகமாதலும் நுணுகுதலும் என்றலும் பொருந்தும் என்பது சிவக்கவிமணி திரு. சி. கே. சுப்பிரமணிய முதலியாரவர்களின் உரைக்குறிப்பு.

**விழுங்குயிர்:** சங்கார காலத்தில் உடலினின்றும் பிரிக்கப்பட்ட உயிர்க்ள்.

**உமிழ்ந்தனை:** இது மீண்டும் உயிர்களை அவைகளின் வினைகளைக் கழித்தற் பொருட்டு உடல்களில் புகுத்துவதைக் குறித்தது. இதனை அனுக்கிரஹம் அல்லது அருளல் எனக் கொள்க.

**குருந்தொசி பெருந்தகை:** திருமால்; அவரது பத்து அவதாரங்களில் ஒன்றும் பூரணவதாரம் என்று கருதப்படுவதும் கிருட்டிணவதாரம் ஆகும். கிருட்டினன் குழந்தைப் பருவத்தில் ஆயர்பாடியில் நந்தகோபன் இல்லத்தில் வளர்ந்து

வந்தபோது கம்சன் என்னும் அவனது தாய்மாமனின் ஏவலால் பல அசுரர்கள் பலவுருவுகளில் கிருட்டினனைக் கொல்ல முயன்று அவனால் தாம் மடிந்தார்கள். அத்தகைய அசுரர்களிலே ஒருவன் குருந்த மரவடிவில் நின்று கண்ணனைக் கொல்லக் காலம் பார்த்திருந்தபோது அம்மரத்தினை ஒடித்துக் கண்ணன் அவனைக் கொன்றனன் என்பர். கிருட்டினன் பூரணவதாரம் ஆகையால் அவனுக்கும் திருமாலுக்கும் பேதமின்மையின் **குருந்தொசி பெருந்தகை** என்று திருமாலைக் குறித்தனர் என்க.

**பிரிந்தனை புணர்ந்தனை!** சிவபெருமானின் சக்தி ஒன்றேயாயினும் அது பயன் பொருட்டு நான்கு விதமாகும். இறைவனுக்கு மனைவியாகும்போது பவானி (பார்வதி) என்றும், கோபம் கொண்டபோது காளி என்றும், போர் செய்யும் போது துர்க்கை என்றும் ஆணுருவடையும்போது திருமால் என்றும் அச்சக்தி பெயர் பெறும். இவ்வாறு ஆகமங்களில் கூறப்பட்டுள்ளது. எனவே திருமால் சக்தி என்ற முறையில் இறைவனோடு புணர்ந்தும் அதாவது ஒன்று கூடியும், திருமால் எனப் பிரிந்தும் செயல்படுவர் என்பதாம். **"அரியலால் தேவியில்லை ஐயன் ஐயாறனார்க்கே"** என்ற அப்பர் திருவாக்கும் காண்க.

இஃதேயன்றிப் பாற்கடலில் தோன்றிய அமிர்தத்தைத் தேவர்கள் மட்டுமே அடையும்படிச் செய்வதற்காகத் திருமால் பேரழகுடன் மோகினியாகத் தோன்றியபோது, சிவபெருமான் மோகினியுடன் சேர்ந்து ஐயனார் என்ற மஹா சாஸ்தாவைப் பெற்றார் என்ற ஸ்காந்த புராண வரலாறுங் காண்க. இதன்படிப் **புணர்ந்தனை–பிரிந்தனை** என மாற்றி உரைத்துக் கொள்க.

மற்றும் ஞானசாத்திர நூல்களின்படி முதல்வனாகிய சிவபெருமான் தமது திரோதான அதாவது மறைப்புச் சத்தியின் கூறாகிய ரோதயித்திரி சத்தியை அதிட்டித்து நின்று

காத்தல் தொழிலைச் செய்யுங்கால் திருமாலோடு புணர்ந்தனன் என்றும், அத்தொழிலை ஒடுக்கிக் கொண்டு ஆரணி சத்தியால் உருத்திரமூர்த்தியை அதிட்டித்துச் சங்காரம் செய்யுங்கால் அத்திருமாலைப் பிரிந்தனன் என்றுங்கூறப்படுதலால் **பெருந்தகையு நீயும் பிரிந்தனை புணர்ந்தனை** என்றருளிச் செய்துள்ளார். இது சிவக்கவிமணி திரு. சி. கே. சுப்பிரமணிய முதலியாரவர்களுடைய பெரியபுராணப் பேருரையிற் பதிக உரைக்குறிப்பில் கண்டது.

**பிணம்புகு மயானம் புரிந்தனை மகிழ்ந்தனை:** இது சங்காரத்தின் (அதாவது ஒடுக்கத்தின்) பின் புனருற்பவம் பொருட்டுச் செய்யப்படும் நடனங் குறித்தது என்பர் திரு. சிவக்கவி மணியவர்கள்.

இத்திருப்பாடல் பல விழுமிய பொருள்களை உடையதாயிருத்தல் காண்க.

4. திருப்புறம்பயம் விரும்பி எழுந்தருளிய பெருமானே! வளம் நிறைந்ததும் வேகம் நிறைந்ததுமான கங்கையினைச் சடையில் ஒடுங்கச் செய்து அதனுடன் அசைகின்ற இளம் பிறைச் சந்திரனை விளக்கம் பெறுமாறு தரித்தனை. உன்னைத் தங்களது உள்ளத்திலேகொண்டு கலந்தவரானஅடியார்கள் காணும்படி சுடலை நீற்றினை மெய்யில் கொண்டு விளங்கினை.

**உளங்கொள அளைந்தவர்:** சிவபூதகணங்கள் என்பர் திரு. சிவக்கவிமணியவர்கள். அவர்கள் கண்டு களிக்கும்படி சுடுஞ் சுடலை நீறு உடலிற் பூசி விளங்கினர் என்பதாம்.

**அளைந்தவர்:** குழைந்தவர்; அடியார்கள் எனக்கொள்ளலுமாம்.

**புளம்:** புலம் என்பதன் போலி (லகர ளகரப் போலி என்பர் இலக்கணநூலார்) புலம் இங்கு உடல் எனப்பொருள் பட்டு நின்றது. எனவே நீறு புலங்கொள என்றது திருநீறு உடல் மேல் கொள (பூசி) என்றபடி.

கங்கையின் வேகத்தை ஒடுக்கும் ஆற்றலும், பிறர் எவராலும் அபயம் அளிக்க முடியாத சந்திரனுக்கு அடைக்கலம் அளிக்கும் பெருங்கருணையுடன் கூடிய பேராற்றலும் உடையானாயினும் தன்னை உள்ளத்திற்கொண்டு அகங் குழையும் மெய்யடியார்களுக்கு அவர்கள் காணும்படி மெய்யின் மேல் சுடலை நீறு பூசித் தன்னை காட்டுவிப்பன் என்று இறைவனின் எளிமையினையும் உடன் கூறியது இப்பாடலின் கருத்தாம் எனக் கொள்க.

ஞானசம்பந்தப் பெருமானரது திருவுள்ளத்தினை ஊன சம்பந்தத்தவராகிய நாம் மொழியறிவு மட்டுமே கருவியாகக் கொண்டு எங்ஙனம் உணரவல்லோம்? எனினும் அவரது திருவடிகளைத் தியானித்து நமது சிற்றறிவுக்கு அவரது திருப்பாதம் உணர்த்தியருளிய படி உரைவகுப்போம். எல்லாப் பதிகங்கட்கும், எல்லாப் பாடல்கட்கும் இவ்வாறே கொள்க.

5. திருப்புறம்பயத்தினை விரும்பி எழுந்தருளிய பெருமானே! பெரும்பிணி, பிறப்பு, இறப்பு ஆகியவை இல்லாதவனே! ஒரு பாகத்தில் கரும்பு போலினிய சொற்களையுடைய உமாதேவியாரை மகிழ்வுடன் வைத்தவனே! வண்டுகள் தேனுண்ண அரும்புகள் மலர்ந்து திரிந்து எழுகின்ற கொன்றை மாலையினை விரும்பியணிந்தனை.

கரும்பொடுபடுஞ்சொலின் மடந்தை: இத்தலத்து அம்பிகையின் திருப்பெயராகிய கரும்படுசொல்லம்மை என்பதைக் குறிப்பிடும் வகையில் அமைந்தது காண்க.

சுரும்பு: வண்டுகள்; இவை தேனை உண்ணுவதற்காக அரும்புகளை மலரச் செய்கின்றன என்பது கருத்து.

பிணியற்றவன் சிவபெருமான் என்பதை நிராமயன் என்று வடமொழியில் கூறுவர். ஆமயம்—நோய்; அது அற்றவன் நிராமயன்.

பெரும்பிணி என்பதை பிறப்புக்கு அடைமொழியாக்கி பெரும்பிணியான பிறப்பினோடு இறப்பற்றவர் எனக்கூறியது மாம் எனக் கொள்க. 'பிறப்பிலி, இறப்பிலி' என்று சிவ பிரானைப் புறச்சமயியான வில்லிபுத்தூராகும். (இவர் வைணவர்) தமது பாரதத்தில் போற்றியுள்ளார் என்பது ஈண்டுக் குறிப்பிடத்தக்கது. நமது சைவ நூல்களில் இம் மாதிரி கூறிய இடங்கள் எண்ணிலடங்கா.

6. எரியோம்பும் கையினர்களான அந்தணர்களும், மற்றும் எத்தொழிலைச் செய்பவர்களாயினும் நின்னை நினைப் புடைய மனத்தினையுடையவர்களாயின் அவர்களது வினை களுக்கு நீ பகைவனாகின்றாய். தழல் போன்று பிரகாசிக்கும் சடையில் பிறைச்சந்திரனுடன் ஒன்றாகக் கங்கை நதி கிடத்தலை உடையவனே! திருப்புறம்பயம் அமர்ந்த பெருமானே!

**அனற்படு தடக்கையர்**: ஓமங்கள், வேள்விகள் முதலிய வற்றுக்காகச் செந்தீ வளர்க்கும் கையினை உடையவர்; அதாவது கற்றாங்கு எரியோம்பிக் கலியை வாராமே தடுக் கும் அந்தணர்கள் எனக் கூறியதாம். இதேயன்றிப் பிராம ணர்களின் வலது கரத்தில் தீ உள்ளது என்ற ஐதிகம் பற்றி **அனற்படு தடக்கையர்** எனக் கூறினார் எனலுமாம்.

**எத்தொழிலரேனும்** என்றது எரியோம்புதல் செய்யும் மறையவர் அல்லாது வேறு எத்தொழிலைப் புரியும் எம்மர பினைச் சேர்ந்தோராயினும் என்று குறிப்பிட்டபடி. பெரிய புராணத்து அடியார்கள் பல்வேறு தொழில்களைச் செய்யும் பல்வேறு மரபினராதல் காண்க. **நினைப்புடை மனத்தவர்**: இறைவனையே எப்போதும் தியானித்திருப்பவர்.

யாவராயினும் அவர்கள் பெருமானை நினைப்புடை மனத்தவராயின் அவர்களது தீவினைகளை இறைவன் போக்கு வன் என்பது ஆசாரியரது கருத்தாம் எனக் கொள்க.

**வினைப்பகை:** வினைகளுக்குப் பகைவன். அதாவது வினைகளைப் போக்குபவன். வினை எனப் பொதுவாகக் கூறினரேனும் இங்குத் தீவினை என்பதே பொருளாகக் கொள்க.

**தனற்படு சுடர்ச்சடை:** தணல் அல்லது தீப்போன்று சுடரும் (ஒளி விட்டுப் பிரகாசிக்கும்) செஞ்சடை என்பதாம். இத்தொடரில் உள்ள படு என்பது உவம உருபு. 'போல' என்ற பொருளைத் தந்து நின்றது. தணல் என்பது **தனல்** எனச்செய்யுள் எதுகை நோக்கி மெலிந்தது.

**புனல்:** இங்கு கங்கையைக் குறித்தது. பிறைச்சந்திரனோடு ஒன்று சேர்ந்து விளங்கும் கங்கையினை உடையவன் என்பது கருத்து.

7. திருப்புறம்பயத்தினை விரும்பி எழுந்தருளிய பெருமானே! பாவ மார்க்கத்தினை வேண்டாதவராகிய தவத்தையுடைய அடியவர்கள் தமது உள்ளத்தினைப் புண்ணிய நெறியிலும் செல்லாதவாறு கடிந்து (அதாவது இருவினையொப்பு கைவரப்பெற்று) உனது திருவருளுக்கு உரிமை பெற்றவர்களது பக்குவத்துக்கேற்றபடி அருள்புரியும் திறமுடையையாயினை. உயிர்களுடன் ஒன்றாக நிற்கும் நீ அத்தன்மையினின்றும் அகன்று வேறாகவும் நிற்கும் திறமுடையை என்றவாறு.

இப்பாடலில் முற்பகுதியில் கூறப்பட்ட பொருள் யாதெனில் பாவமார்க்கம் பிறவிக்குக் காரணமாதல் போலவே புண்ணிய மார்க்கமும் அப்புண்ணியப் பயனை நுகரப் பிறவிக்கு ஏதுவாய் முடியுமாதலின் தவநெறி நிற்கும் அடியவர்களது உள்ளம் அறத்துறையிலும் செல்லாது நல்வினை தீவினை ஆகிய இருவினையொப்புடைமையினைப் பெறும் என்பதாம். இத்தகு நிலையுடையவரே அருளுக்கு உரிமை பெற்றவர் என்க.

இங்ஙனமின்றி உள்ளம் அறத்துறை ஒறுத்து என்பதற்கு அறத்துறையில் செல்லும்படி உள்ளத்தையொறுத்து

அதாவது ஐம்புல இன்பங்களில் செல்லாது அறத்துறையில் நிற்கும்படி தடை செய்தல், எனச்சிவக்கவிமணி திரு. சி. கே. சுப்பிரமணிய முதலியார் அவர்கள் தமது பெரிய புராணப் பேருரையில் பதிக உரைக்குறிப்பில் கொடுத்துள்ளார்கள். முற்கூறியபடி அறநெறியும் பிறவிக்குக் காரணமாதலின் இவ்வுரைப் பொருத்தம் ஆராய்ச்சிக்குரியதாம்.

8. இலங்கையில் வாழ்ந்த மக்கள் வணங்கிப் போற்றிய அவர்களது அரசனாகிய இராவணன், திருக்கயிலைமலையினைப் பெயர்த்தெடுக்கும் முயற்சியில் ஆரவாரிக்க, பெருங்கல்லை ஒத்த அவனது நீண்ட கைகள் நசுங்கும்படி நெருக்குதலும் அவன் அஞ்சி உன்னை வணங்கப் பின் அவன் நன்மை பெற்று அழகுடன் விளங்க அருளைச் செய்தனை. ஐம்புலன் களை விட்டு நீங்கி நின்றனை.

வழக்கம் போல இப்பாட்டில் இராவணனது செய்தி கூறினார். கடைசி வரியில் இறைவனைப் பொறிவாயில் ஐந் தவித்தான் எனத் திருக்குறள் போற்றும் பொருளினால் குறிப்பிட்டு ஏத்தினார் எனக்கொள்க. அத்திருக்குறளையும் அதன் பொருளையும் பின்வருமாறு கண்டு கொள்க.

> "பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க
> நெறிநின்றார் நீடுவாழ்வார்."

(இதன் பொருள்) மெய், வாய், கண், மூக்கு, செவி யென்னும் பொறிகளை வழியாகவுடைய ஐந்து அவாவினை யும் அறுத்தானது மெய்யான ஒழுக்க நெறியின்கண் வழு வாது நின்றார் பிறப்பின்றி எக்காலத்தும் ஒரு தன்மையராய் வாழ்வார்.

இக்குறளில் இறைவன் **பொறிவாயில் ஐந்தவித்தான்** எனப் போற்றப்பட்டுள்ளமை காண்க. இக்கருத்தையே **அஞ்சு புலன்களை விலங்கினை** எனத் திருஞானசம்பந்தப் பிள்ளையார் குறிப்பிட்டுப் பாடியருளினார் என்க.

விலங்கினை என்பது விலகினை, நீங்கினை என்று பொருள் படும்.

9. திருப்புறம்பயம் விரும்பி எழுந்தருளிய பெருமானே! ஆலிலையின் மீது படுத்துறங்கிய, கொப்பூழாகிய தாமரையுடன் கிடந்த திருமாலும், அம்மலர் மேலிருந்த பிரம்மதேவனும் அடியினையும் முடியினையும் அளந்துணர இயலாதாராயினர். அவர்களே பின்னர் (தங்களது அன்னப் பறவை உருவத்தையும் பன்றியின் உருவத்தையும் நீங்கி) தமது இயற்கை உருவுடன் உன்னை வணங்க அவர்களை மறைத்திருந்த அறியாமை இருள் நீங்குமாறு அவர்க்கருள் செய்தனை.

வடம் — ஆலமரம்; இங்கு ஆலிலையைக் குறித்தது.

இடை அல்லி — கொப்பூழிடையில்.

புடங்கருள் — புடம்+கருள்: புடம் மறைப்பு என்றும் கருள் இருள் என்றும் பொருள்படும். இறைவன் ஒளிப் பிழம்பாய் எதிரில் நின்றும் இருளினால் மறைக்கப்பட்டாற் போல அறியாமையால் மறைக்கப்பட்டார்கள். பின்னர் இறைவன் தன்னை அவர்கட்குக் காட்டி அவ்வறியாமையைப் போக்கினான். இதையே புடங்கருள் செய்து ஒன்றினை எனக் குறிப்பிட்டார் என்க.

10. திருப்புறம்பயத்தில் விரும்பி எழுந்தருளிய ஞான மூர்த்தியே! ஊனுணவு நன்று என்று சொல்பவரும் அது தீதென்று சொல்பவரும் ஆகிய உடம்பினை முழுதும் மறைத்து உடுக்கும் பௌத்தர்களும், உடையினைக் களைந்த உடலையுடைய சமணர்களும் கூறும் அவர்களது சமய நூல்களின் உரைகளைத் தாழ்ச்சியடையும்படி செய்தனை, உமா தேவியாரை ஒரு பாகம் வைத்தனை. (யாவும் நின் அருட் செயலே என்றபடி)

**விடக்கு** — ஊன் (மாமிச) உணவு. தாம் கொல்லாது பிறர் கொன்று மாமிச உணவு கொடுத்தால் அதனை நன்று எனக்கொள்பவர் பௌத்தர்கள். தாமுங்கொல்லாது பிறர் கொன்றாலும் கொள்ளாது ஊன் உண்டல் தீது என்பவர் சமணர்கள். பவுத்தர்கள் தமது உடலை முழுவதும் போர்த்திக் கொள்வர். சமணகுருமார்களோ உடையினைக் களைந்து திகம்பரர்களாக நிற்பர்.

**படக்கர்** — உடையுடுத்தோர். இங்கு பௌத்தர்களைக் குறித்தது. **பிடக்கு** — அவரது சமய நூலினைக் குறித்தது.

**உரவோன்** — உரம் என்றால் அறிவு. அதனையுடையவன் உரவோன். இறைவனுக்காகையில் அறிவு என்பது ஞானமாகும். எனவே ஞானமூர்த்தி எனப் பொருள் கொண்டோம். இனி உரம் என்பது வலிமை என்றும் பொருள்படுமாகையால் வலிமையுடையவன் எனவுங் கொள்ளலாம். அல்லது அறிவின் வலிமையுடையோன் எனவுங் கொள்ளலாம்.

பௌத்தர், சமணர் ஆகியோரது சமய நூல் உரைகள் முத்திக்கேதுவாகாது பிறவிக்கே ஏதுவாதலின் அவைகளைப் படுத்தார் என்க.

*11.* உப்பளங்களில் மோதும் அலைகள் மூலம் கரைக்கு வந்து உலவும் முத்துக்களைத் தருகின்ற திருக்கழுமலம் என்னும் சீகாழி மக்களுக்குத் தலைவனாகிய தமிழுக்குரிமை பெற்ற திருஞானசம்பந்தன் வண்டுகள் மலர்களை மலர்த்துகின்ற திருப்புறம்பயத்தினை விரும்பிப் பாடிய இத்தமிழ்ப் பதிகம் பாடவல்லவர் பெரும்பிணியாகிய பிறப்பு முற்றும் ஒழியும்படி நீங்கப் பெறுவர் என்பதாம்.

**மருங்கு அற** — முற்றும் ஒழிய.

**பிறவி ஒருங்குவர்** — பிறவி ஒழியப் பெறுவர்.

சிவம்

உ

சிவமயம்

சிவனுண்டு பயமில்லை

# திருச்சேய்ஞலூர்

பண்—பழந்தக்கராகம்] [1-ம் திருமுறை

திருச்சிற்றம்பலம்

நூலடைந்த கொள்கையாலே நுன்னடி கூடுதற்கு
மாலடைந்த நால்வர்கேட்க நல்கிய நல்லறத்தை
ஆலடைந்த நீழல்மேவி அருமறை சொன்னதென்னே
சேலடைந்த தண்கழனிச் சேய்ஞலூர் மேயவனே. 1

நீறடைந்த மேனியின்கண் நேரிழை யாளொருபால்
கூறடைந்த கொள்கையன்றிக் கோல வளர்சடைமேல்
ஆறடைந்த திங்கள்சூடி அரவம் அணிந்ததென்னே
சேறடைந்த தண்கழனிச் சேய்ஞலூர் மேயவனே. 2

ஊனடைந்த வெண்டலையி னோடு பலிதிரிந்து
கானடைந்த பேய்களோடு பூதங் கலந்துடனே
மானடைந்த நோக்கிகாண மகிழ்ந்தெரி யாடலென்னே
தேனடைந்த சோலைமல்கு சேய்ஞலூர் மேயவனே. 3

வீணடைந்த மும்மதிலும் வில்மலை யாவரவின்
நாணடைந்த வெஞ்சரத்தால் நல்லெரி ஊட்டலென்னே
பாணடைந்த வண்டுபாடும் பைம்பொழில் சூழ்ந்தழகார்
சேணடைந்த மாடமல்கு சேய்ஞலூர் மேயவனே. 4

பேயடைந்த காடிடமாப் பேணுவ தன்றியும்போய்
வேயடைந்த தோளியஞ்ச வேழம் உரித்ததென்னே
வாயடைந்த நான்மறையா றங்கமோ டைவேள்வித்
தீயடைந்த செங்கையாளர் சேய்ஞலூர் மேயவனே. 5

காடடைந்த ஏனமொன்றின் காரண மாகிவந்து
வேடடைந்த வேடனாகி விசயனொ டெய்ததென்னே
கோடடைந்த மால்களிற்றுக் கோச்செங்க ணாற்கருள்செய்
சேடடைந்த செல்வர்வாழும் சேய்ஞலூர் மேயவனே. 6

பீரடைந்த பாலதாட்டப் பேணாத வன்தாதை
வேரடைந்து பாய்ந்ததாளை வேர்த்தடிந் தான்தனக்குத்
தாரடைந்த மாலைசூட்டித் தலைமை வகுத்ததென்னே
சீரடைந்த கோயில்மல்கு சேய்ஞலூர் மேயவனே. 7

மாவடைந்த தேரரக்கன் வலிதொலை வித்தவன்றன்
நாவடைந்த பாடல்கேட்டு நயந்தருள் செய்ததென்னே
பூவடைந்த நான்முகன்போல் பூசுரர் போற்றிசெய்யும்
சேவடைந்த ஊர்தியானே சேய்ஞலூர் மேயவனே. 8

காரடைந்த வண்ணனோடு கனக மனையானும்
பாரடைந்தும் விண்பறந்தும் பாதமு டிகாணார்
சீரடைந்து வந்துபோற்றச் சென்றருள் செய்ததென்னே
தேரடைந்த மாமறுகிற் சேய்ஞலூர் மேயவனே. 9

மாசடைந்த மேனியாரும் மனந்திரி யாதகஞ்சி
நேசடைந்த ஊணினாரும் நேசமி லாததென்னே
வீசடைந்த தோகையாட விரைகம ழும்பொழில்வாய்த்
தேசடைந்த வண்டுபாடுஞ் சேய்ஞலூர் மேயவனே. 10

சேயடைந்த சேய்ஞலூர் செல்வன சீர்பரவித்
தோயடைந்த வண்வயல்சூழ் தோணி புரத்தலைவன்
சாயடைந்த ஞானமல்கு சம்பந்தன் இன்னுரைகள்
வாயடைந்து பாடவல்லார் வானுல காள்பவரே. 11

திருச்சிற்றம்பலம்

சுவாமி—சத்தியகிரீசுவரர் } [தேவி—சகிதேவியார்.
சத்தகிரீசுவரர். }

**பதிகவரலாறு:** திருப்புறம்பயம் பாடி வணங்கிய திருஞானசம்பந்தர் அங்கிருந்து புறப்பட்டு இறைவரது தலங்கள் பலவற்றையும் தொழும் விருப்பினராய் திருச்சேய்ஞலூர் வந்து சேர்ந்தனர். சீகாழித்தலைவர் இங்ஙனம் எழுந்தருளி வரச் சேய்ஞலூரில் வாழும் அரிய வேதியர்கள் தமது பதியினை நன்கு அலங்கரித்துப் பெரிய மறை முழக்கத்தோடு பிள்ளையாரை எதிர்கொள்ளும் பொருட்டு வந்தனர். சிவபெருமான் தமது திருமுடி மாலையினைச் சூட்டிய பிள்ளையாகிய சண்டேசர் அவதரிக்கப் பெற்ற தலம் என்று எண்ணித் திருஞானசம்பந்தர் சிவிகையினின்றும் இறங்கி எதிர் வணங்கி வந்தனர். தங்களுடைய தலத்தில் முன்னர் அவதரித்த சண்டீசப்பிள்ளையாரே மீண்டும் எழுந்தருளி வரக் கண்டனர் போன்ற மகிழ்ச்சியுடன் திருச்சேய்ஞலூர் வேதியர்கள் திருஞானசம்பந்தரை வணங்கியும் பாடியும் ஆரவாரித்தனர். பல்வகையாலும் அவ்வேதியர்கள் தமது மகிழ்ச்சிப் பெருக்கினைத் தெரிவித்து வணங்கப் பிள்ளையாரும் இறைவனார் எழுந்தருளிய திருக்கோயிலுக்குச் சென்று அங்குச் செங்கைகள் உச்சி மீது ஏறக் கும்பிட்டு வணங்கினர். அப்பெருமானாரது கருணையினைப் போற்றித் திருஞானசம்பந்தர், தந்தையை தாளினை வெட்டிய சண்டீசப் பிள்ளையார் பாதகச் செயலாகிய அதற்குச் சிவனார் மகனாராகிய பரிசினைப் பெற்றதையும் அமைத்துப் பாடிய திருப்பதிகம் இதுவாகும். இதனைச் சேக்கிழார் கூறுதல் காண்க.

வேதியர் சேய்ஞலூர் விமலர் தங்கழல்
காதலிற் பணிந்தவர் கருணை போற்றுவார்
தாதை தாள்தடிந்த சண்டீசப் பிள்ளையார்
பாதகப் பயன்பெறும் பரிசு பாடினார்

—திருஞானசம்பந்தர் புராணம்: 248

பதிகப்பொழிப்புரை :

*1.* பல நூல்களைக் கற்றும் அவ்வறிவினால் நினது திருவடியைக் கூடுதற்கு இயலாது மயக்கங் கொண்ட நால்வர்கள்

கேட்கும்படியாக உபதேசித்த நல்ல அறமாகிய அருமறையினை ஆலமரத்தின் நிழற்கீழ் வந்து அருளியது என்னே! சேல் மீன்கள் நிறைந்த குளிர்ந்த வயல்களையுடைய திருச்சேய்ஞலூரில் எழுந்தருளிய பெருமானே!

**நூலடைந்த கொள்கை:** வேத ஆகமங்கள் முதலிய பல நூல்களைக் கற்று அதனால் பெற்ற அறிவினைக் குறித்தது.

**மாலடைந்த:** உண்மை எதுவெனத் தெளியாது மயக்கத்தினையடைந்த.

**நால்வர்:** பிரம்மதேவனது மனதினின்றும் தோன்றிய நால்வர். இவர்கள் சனந்தனர், சனத்குமாரர், சனாதனர், சனகர் எனப்படுவர்.

**அருமறை:** அரிய மறைப் பொருளை. (அரிய அனுபூதி நிலையான இரகசியத்தை என்பது திருத்தருமையாதீன உரைக்குறிப்பு.)

**என்னே!**—உபதேசித்த கருணைத் திறந்தான் என்ன பெருமை என்ற அற்புதக் குறிப்பு. மேல் வரும் பாடல்களிலும் என்னே என்பதற்கு இங்ஙனமே கொள்க.

இப்பதிக முழுமையும் அடிதோறும் அடைந்த என வருவது சொற்பொருட் பின்வருநிலை என்பர் இலக்கண நூலார். இச்சொல் ஆங்காங்கு உரிய முறையில் பொருளைத் தரும்.

2. சேறு நிறைந்த குளிர்ச்சி பொருந்திய வயல்களையுடைய திருச்சேய்ஞலூரில் விரும்பி எழுந்தருளிய பெருமானே! திருநீறு சேர்ந்த நினது திருமேனியில் சிறந்த அணிகலன்களையணிந்த உமாதேவியாரை ஒரு பாகமாகக் கொண்டதேயன்றி, நினது அழகிய வளரும் சடைமேல் கங்கையையும் தரித்து, அத்துடன் திங்களையும் சூடிப் பாம்பினையும் அணியாகக் கொண்டதென்னே!

ஒரு பாகமாக உமாதேவியார் இருக்கக் கங்கை முதலியவற்றையும் கொண்டதென்னே என வினவியவாறு.

**நேரிழை:** நேர்த்தியான ஆபரணங்கள் எனப் பொருள் பட்டு அவற்றை அணிந்த பெண் என்ற பொருளில் வந்தது. அன்மொழித் தொகை என்பது இலக்கணம்.

**கோலம்:** அழகு.

3. பிரம்ம தேவனது தலையாகிய ஓட்டினேடு பிச்சைக்குச் சென்றும், கானகத்திலே நிறைந்த பேய்களும் பூதங்களும் புடைசூழ மான் போன்ற மருண்ட பார்வை யினையுடைய உமாதேவியார் காணும்படி மகிழ்ந்து கையில் எரியேந்தி ஆடியதும் என்னே! தேன் நிறைந்த சோலைகள் மிக்கு விளங்கும் திருச்சேய்ஞலூரில் விரும்பி எழுந்தருளிய பெருமானே!

**ஊனடைந்த வெண்டலை:** பிரமமதேவனது கிள்ளப்பட்ட தலை கிள்ளும் போது ஊனுடன் கூடியிருந்தமையால் இங்ஙனம் கூறினர் என்க. பின்னர் தசையற்று வெறுந்தலை யானது என்றது குறிக்க வெண்டலை என்ருர்.

**மான் அடைந்த நோக்கி:** என்பதற்கு மான், பார்வை யைக் கற்றுக் கொள்வதற்கு, வந்தடைந்த நோக்கினை யுடைய உமாதேவியார் எனப் பொருள் கொண்டனர் திருத்தருமையாதீன குறிப்புரையாசிரியர்.

**நோக்கி:** நோக்கினையுடையவள் எனப் பெயர்ச் சொல்லாகக் கொள்க.

4. பயனற்றுப் போன மும்மதில்களையும் மலையினை வில்லாகவும் பாம்பினை நாணுகவுங் கொண்டு எய்த கொடிய அம்பினுல் நல்ல எரியூட்டியது என்னே! வண்டுகள் பாடு கின்ற இசைகள் நிறைந்த பொழில்கள் சூழ்ந்து அழகானதும் விண்ணளவு ஓங்கிய மாடங்கள் நிறைந்ததுமான திருச்சேய் ஞலூரில் விரும்பி எழுந்தருளிய பெருமானே!

**வீணடைந்த மும்மதில்:** தீய பயனைத் தந்ததால் எரிந்து பயனற்றுப் போன மும்மதில்.

**நல் எரியூட்டல்:** நல்ல எரி என்றது புண்ணியமூர்த்தியாகிய சிவபிரானின் சிரிப்பினின்றும் தோன்றியதால் என்க. **எரியூட்டல்** என்றது எரிக்கு உணவாக ஊட்டுதல். எரியும் படிச்செய்தல் என்பதாம்.

**பாண்**—பாட்டு, **சேண்**—ஆகாயம்

**பாணடைந்த வண்டு பாடும்** என்பதை வண்டு பாடும் பாணடைந்த என்று மாற்றிப் பொருள் கொள்ளப்பட்டது. அல்லது பாண் என்பதை வண்டுக்கு அடைமொழியாக்கி இசை நிறைந்த வண்டுகள் எனக் கொள்ளினும் இழுக்கில்லே

5. பேய்கள் சென்று வசிக்கின்ற சுடுகாட்டினேயே சிறந்த இடமாகக் கொண்டு அங்கு ஆடல் புரிதலேயன்றி, மூங்கிலே ஒத்த தோள்களேயுடைய உமாதேவியார் அஞ்சும் படி யானேயினே உரித்தது ஏனே? வாயினுல் ஓதியே பயிலப் பட்டு வருகின்ற நான்கு மறைகளேயும் ஆறு வேதாங்கங்களே யும் கற்றதோடன்றி ஐம்பெரு வேள்விகளேச் செய்யும் எரி யோம்பும் அந்தணர்கள் வாழும் திருச்சேய்ஞலூரில் விரும்பி எழுந்தருளிய பெருமானே!

**காடு இடமாய்ப் பேணுதல்** — காட்டினே சிறந்த இடமாகக் கொண்டு அங்கு அமர்தல், ஆடுதல்.

**வேய்** — பசுமையான மூங்கில். **தோளி** — தோளேயுடையவள், இங்கு உமாதேவியாரைக் குறித்தது.

**வாயடைந்த நாள்மறை** — எழுதிப் படிக்காமல் வாயினுலேயே பிறர் சொல்லக் கேட்டுத் தான் சொல்லிப் பயிலும் வேதங்கள்; அல்லது வாயினுல் ஓதப்பெறுகின்ற வேதங்கள் என்பதும் கொள்ளலாம். ருக், யஜுர், சாமம், அதர்வணம் என்பன நான்மறைகள்.

**ஆறு அங்கங்கள்** — இவை சிக்ஷை, வியாகரணம், நிருத்தம், கல்பம், ஜோதிஷம், சந்தஸ் என்பனவாம். இவை பற்றிய விளக்கத்தைத் தமிழ்மாலே- 7, பக்கம் 62-ல் காண்க.

ஐவேள்வி — ஐந்து பெரும் வேள்விகள். இவை அந்தணர்களால் தினமும் செய்யப்பட வேண்டியவையாகும். பஞ்சமஹாயக்ஞம் என்று வடமொழியில் கூறுவர். அவையாவன (1) தேவ யக்ஞம், (2) பிரம்ம யக்ஞம், (3) பூத யக்ஞம், (4) பிதுர் யக்ஞம், (5) மனுஷ்ய யக்ஞம் என்பனவாம். இவற்றின் விளக்கம் :

1. தேவயக்ஞம் — இது அக்னியில் ஸமித்துக்களாலும் அன்னத்தினுலும் ஹோமம் செய்வது.

2. பிரம்ம யக்ஞம் — தான் கற்ற வேதத்தினை ஓதுதல்.

3. பூதயக்ஞம் — தெரிந்தும் தெரியாமலுமிருக்கும் ஜீவராசிகளுக்கு அன்னத்தினுல் பலி வைத்தல்.

4. மனுஷ்ய யக்ஞம் — அதிதிகளுக்கு அன்னமிடுதல் அதாவது விருந்தோம்புதல்.

5. பிதுர் யக்ஞம் — அன்னத்தினுலோ தீர்த்தத்தினுலோ பித்ருக்களுக்கு (மாண்ட மூதாதையருக்கு) திருப்தி செய்வது.

தீயடைந்த செங்கையாளர் — அந்தணர்களின் வலது கரத்தில் திப்பொருந்தியுள்ளது என்ற மரபு பற்றி இங்ஙனம் கூறினுர் என்க. அல்லது வேள்விகளுக்கான எரியினை உண்டாக்கும் அல்லது எரி வேட்கும் கையினையுடையவர் எனலுமாம். சிறப்புப்பற்றிச் செங்கை அதாவது செம்மைத் தொழில் புரியும் கை எனக் கூறினுர்.

திருஞானசம்பந்தர் காலத்து வேதியர்கள் வேதங்களையும் வேதாங்கங்களையும் கற்றதோடமையாது அவற்றில் கூறியவண்ணம் நடந்தனர் என்பது இப்பாடலால் அறியப்படுகிறது.

6. கானகத்தினை வந்தடைந்த ஒரு பன்றியினைக் காரணமாகக்கொண்டு வேடுவக்கோலம் பூண்டு விசயனுடன்

போரிட்டது என்னே? தந்தத்தினையுடைய பெரிய யானையினையுடைய கோச்செங்கட்சோழனுக்கருள் செய்தவனும், பெருமையுடைய செல்வர்கள் வாழ்கின்ற திருச்சேய்ஞலூரை விரும்பி எழுந்தருளியவனுமான பெருமானே!

வேடுவக்கோலம் பூண்டு அருச்சுனன் என்ற விசயனுடன் போரிட்ட செய்தி மஹாபாரதத்தில் உள்ளது. இது பற்றி நமது சிறப்பு வெளியீடான கிராதார்ஜுனீயம் என்கிற வேடனும் விசயனும் என்ற நூலில் (விலை ரூ. 1-00) விரிவாகக் காணலாம். இவ்வரலாறு நமது தமிழ் மாலையிலும் பின்னர் திருமுறைக்ளில் புராண வரலாறுகள் என்ற பகுதியில் விளக்கப்படும்.

ஏனம்—பன்றி; கோடு—தந்தம்; சேடு—பெருமை.

**களிற்றுக் கோச்செங்கணன்:**— யானைப்படையினையுடைய கோச்செங்கட்சோழன் என்னும் பொருளேயல்லாமல் முற்பிறவியில் சிலந்தியாயிருந்து யானையுடன் பகைத்து முன் நினைவுடன் அவதரித்த கோச்செங்கட்சோழன் என்றும் கொள்ளலாம். இச்சோழமன்னர் அறுபத்து மூன்று நாயன்மாரில் ஒருவராகக் கோச்செங்கட்சோழ நாயனார் என்று வழங்கப்படுகிறார்.

7. பசுக்கூட்டங்கள் தாமாகவே கறந்த பாலைக் கொண்டு (மணலால் அமைத்த இலிங்கத்திற்கு) திருமஞ்சனமாட்ட அதனைக் கண்டு அதன் பெருமையினை மனதில் கொள்ளாது கோபித்துப் பாய்ந்து பாற்குடத்தினை உதைத்த வன்னெஞ்சினனான தந்தையின் காலை அறுத்தவனாகிய விசாரசருமனுக்குத் தாம் சூடியிருந்த கொன்றை மாலையினைச் சூட்டி அத்துடன் சண்டேசன் என்னும் தலைமையும் பதவியும் அருள் செய்தது என்னே? பெருமை பொருந்திய கோயில் நிறைந்த திருச்சேய்ஞலூரில் விரும்பி எழுந்தருளியுள்ள பெருமானே!

பெரிய புராணத்தில் உள்ள சண்டேசுர நாயனர் வரலாற்றுச் சிறப்பு இப்பாடலிற்கூறப்படுகிறது. சண்டீச நாயனுர் விசாரசருமர் என்ற பெயருடன் திருச்சேய் ஞலூரில் அவதரித்தவர். எனவே அவரது பெருமையைப் பதிகத்தில் அமைத்துப் பாடினுர் என்க.

**பீர்**—சுரப்பு; பால் கறத்தலைப் பால் பீச்சுதல் என்றும் சொல்வதுண்டு.

**பீரடைந்த**— என்பதனுல் தானுகவே பால் சுரப்பு ஏற் பட்டுப் பசுக்கள் பொழிய அதனைக் கொண்டு அபிஷேகம் செய்தார் என்பதாம்.

**பேணுத** என்றது சிவலிங்கத்திற்கு திருமஞ்சனம் ஆகின்ற சிறப்பினைக் கொள்ளாது பாலைக் கீழே மணலிலே சிந்துகிறுர் விசாரசருமர் என்று அறியாமையால் எண்ணி யதைக் குறித்தது.

**வேரடைந்து**— சினத்தினுல் வியர்வை ஏற்படுதலைக் குறித்தது. சினத்தின் மிகுதியைக் குறித்ததுமாம்.

8. தாமரை மலர் மேல் வீற்றிருக்கும் பிரம்மதேவனைப் போன்ற மறையவர்கள் துதித்து வணங்கும் இடபவாகனத் தையுடையவனே! திருச்சேய்ஞலூர் விரும்பி எழுந்தருளிய வனே! குதிரை பூட்டிய தேரினையுடைய இராவணனது வலிமையினைத் தொலையும்படி செய்து பின்னர் அவன் தனது நாவினுல் பாடிய சாமகீதம் கேட்டு மகிழ்ந்து அவனுக்கருள் செய்ததென்னே?

இராவணனது தேர் வானில் பறக்கும் புஷ்பகமாயினும் தேர் என்ற பொதுமை நோக்கி மா அடைந்த தேர் என்ருர் எனக் கொள்க. **மா**-குதிரை.

**நாவடைந்த பாடல்**—துதி, இங்குச் சாமகீதம் எனக் கொள்க. **பூசுரர்**— வேதியர்கள்; பண்டைக் காலத்தில்

அந்தணர்களது சிறந்த நிலை குறித்து அவர்களைப் பூவுலகில் தேவர்கள் என்று பொருள் படும் பூசுரர் என்று சொல்வது வழக்கம். அந்த நிலையினின்றும் நாம் இன்று இழிந்து விட்டது காலத்தின் கோலம் போலும். நமது தவக் குறைவுமாம்.

**சே**—இடபம் (எருது).

9. கருநிறமுடைய திருமாலும் பொன்போலும் நிற முடைய பிரம்மதேவனும் முறையே பூமியினை அகழ்ந்தும் விண்ணிலே பறந்தும் திருவடிகளையும் திருமுடியினையும் காணுதவராயினர். பின்னர் நன்னிலையடைந்து வந்து உன்னைப் போற்றி வணங்க அவர்கள் முன் ஓடிச்சென்று (காட்சியளித்து) அவர்கட்கு அருள் செய்ததென்னே? தேர் ஓடும் பெரிய வீதிகளையுடைய திருச்சேய்ஞலூரில் கோயில் கொண்ட பெருமானே!

**காரடைந்த வண்ணன்:**—கருநிறமுடைய திருமால்.

**கனகமனையான்**—பொன்னிறமுள்ள பிரம்மதேவன்.

**சீரடைந்து** என்றது தங்களது சிறுமையினை உணர்ந்து நாம் பரமல்ல, சிவபெருமானே முதல்வர் என்றறிந்து வணங்க வந்த நன்னிலையினைக் குறித்து நின்றது.

**சென்றருள் செய்தது** என்றது அவர்கள் அன்புடன் வணங்கத் தாமே விரைந்து அவர்கள் முன் தோன்றிக் காட்சியளித்து அவர்கட்கு வேண்டும் வரம் தந்தருளியது என்பதாம்.

10. அழுக்குப்படிந்த உடலையுடைய சமணர்களும் கஞ்சி உணவின் மீது மிகப் பிரியம் கொண்ட புத்தர்களும் உம்மிடத்து அன்பு கொள்ளாதது என்னே? மணங்கமழும் சோலைகளிடத்தே வீசியாடுகின்ற தோகைகளையுடைய மயில்கள் ஆட, ஒளியுடைய வண்டுகள் பாடுகின்ற திருச் சேய்ஞலூர் மேவிய பெருமானே!

மாசடைந்த மேனியர்— நீராடாமையால் அழுக்குப் படிந்த உடலையுடைய சமணர். மனந்திரியாதகஞ்சி நேச டைந்த ஊணினர்—என்றும் வெறுப்பு இல்லாது கஞ்சி உணவை விரும்பும் புத்தர்கள் என்றவாறு.

11. முருகப்பெருமான் வந்து வழிபட்ட திருச்சேய் ஞலூரில் கோயில் கொண்ட செல்வனாகிய சிவபெருமா னுடைய பெருமைகளைத் துதித்து நீர்வளம் மிக்க வள வயல்கள் சூழ்ந்த திருத்தோணிபுரத் தலைவனாகிய நுண்மை நிறைந்த ஞானத்துடன் கூடிய சம்பந்தனின் இந்த இனிய சொல்மாலையினைத் தமது வாயினால் பாட வல்லவர்கள் வானுலகம் ஆள்பவர் ஆவார்.

முருகப் பெருமான் சூரபன்மனைக் கொல்லப் படை யுடன் கூடித் தென்திசை நோக்கி வந்தபோது திருச்சேய் ஞலூரில் தங்கி இறைவனை வழிபட்டார் என்ற கந்த புராண வரலாறு பற்றி 'சேயடைந்த சேய்ஞலூர்'' என்று கூறியருளினர்.

சேய்--முருகன்; இக்காரணம் பற்றியே இத்தலம் சேய் ஞலூர் எனறு பெயர் பெற்றது. மற்றும் முருகப்பெருமான் தாம் தங்குவதற்கு இதுவே நல்ல ஊர் என்று இங்கே தங்கி யருளியதால் சேய்+நல்+ஊர்=சேய்நல்லூர் எனப் பெயர் பெற்றுப் பின்னர் சேய்ஞலூர் என மருவியது என்றும் கூறுவர்.

தோயடைந்த—தோயம் அதாவது நீர் நிறைந்த என்ப தாம்.

சாய்—நுணுக்கம், ஒளி அதாவது ஞானஒளி எனக் கொள்ளலுமாம்.

சிவம்

உ

சிவமயம்

சிவனுண்டு பயமில்லை

# திருப்பனந்தாள்

பண் — பஞ்சமம்] [3-ம் திருமுறை

திருச்சிற்றம்பலம்

கண்பொலி நெற்றியினான் திகழ் கையிலொர் வெண்மழுவான்
பெண்புணர் கூறுடையான் மிகு பீடுடை மால்விடையான்
விண்பொலி மாமதிசேர் தரு செஞ்சடை வேதியனூர்
தண்பொழில் சூழ்பனந்தாள் திருத் தாடகை ஈச்சரமே. 1

விரித்தவன் நான்மறையை மிக்க விண்ணவர் வந்திறைஞ்ச
எரித்தவன் முப்புரங்கள் இயல் ஏழுல கில்லுயிரும்
பிரித்தவன் செஞ்சடைமேல் நிறை பேரொலி வெள்ளந்தன்னைத்
தரித்தவன் ஊர்பனந்தாள் திருத் தாடகை ஈச்சரமே. 2

உடுத்தவன் மானுரிதோல் கழல் உள்கவல் லார்வினைகள்
கெடுத்தருள் செய்யவல்லான் கிளர் கீதமொர் நான்மறையான்
மடுத்தவன் நஞ்சமுதா மிக்க மாதவர் வேள்வியைமுன்
தடுத்தவன் ஊர்பனந்தாள் திருத் தாடகை ஈச்சரமே 3

சூழ்தரு வல்வினையும் உடன் தோன்றிய பல்பிணியும்
பாழ்பட வேண்டுதிரேல் மிக ஏத்துமின் பாய்புனலும்
போழிள வெண்மதியும் அனல் பொங்கர வும்புனைந்த
தாழ்சடை யான்பனந்தாள் திருத் தாடகை ஈச்சரமே. 4

விடம்படு கண்டத்தினான் இருள் வெள்வளை மங்கையொடும்
நடம்புரி கொள்கையினான் அவன் எம்மிறை சேருமிடம்
படம்புரி நாகமொடு திரை பன்மணி யுங்கொணரும்
தடம்புனல் சூழ்பனந்தாள் திருத் தாடகை ஈச்சரமே. 5

விடையுயர் வெல்கொடியான் அடி விண்ணொடு மண்ணு
மெல்லாம்
புடைபட ஆடவல்லான் மிகு பூதமார் பல்படையான்
தொடைநவில் கொன்றையொடு வன்னி துன்னெருக் கும்ம
ணிந்த
சடையவன் ஊர்பனந்தாள் திருத் தாடகை ஈச்சரமே. 6

மலையவன் முன்பயந்த மட மாதையொர் கூறுடையான்
சிலைமலி வெங்கணையால் புரம் மூன்றவை செற்றுகந்தான்
அலைமலி தண்புனலும் மதி ஆடர வும்மணிந்த
தலையவன் ஊர்பனந்தாள் திருத் தாடகை ஈச்சரமே. 7

செற்றரக் கன்வலியைத் திரு மெல்விர லால்அடர்த்து
முற்றும்வெண் ணீறணிந்த திரு மேனியன் மும்மையினுன்
புற்றர வம்புலியின் னுரி தோலொடு கோவணமும்
தற்றவன் ஊர்பனந்தாள் திருத் தாடகை ஈச்சரமே. 8

வின்மலை நாணரவம் மிகு வெங்கனல் அம்பதனல்
புன்மைசெய் தானவர்தம் புரம் பொன்றுவித் தான்புனிதன்
நன்மலர் மேலயனுஞ் நண்ணும் நாரண னும்மறியாத்
தன்மையன் ஊர்பனந்தாள் திருத் தாடகை ஈச்சரமே. 9

ஆதர் சமணரொடும் மடை யைந்துகில் போர்த்துழலும்
நீதர் உரைக்குமொழி அவை கொள்ளன்மின் நின்மலனூர்
போதவிழ் பொய்கைதனுள் திகழ் புள்ளிரி யப்பொழில்வாய்த்
தாதவி ழும்பனந்தாள் திருத் தாடகை ஈச்சரமே. 10

தண்வயல் சூழ்பனந்தாள் திருத் தாடகை ஈச்சரத்துக்
கண்ணய லேபிறையான் அவன் தன்னைமுன் காழியர்கோன்
நண்ணிய செந்தமிழால் மிகு ஞானசம் பந்தன்நல்ல
பண்ணியல் பாடல்வல்லார் அவர் தம்வினை பற்றறுமே. 11

திருச்சிற்றம்பலம்

சுவாமி --செஞ்சடையப்பர்] [தேவி—பெரியநாயகி

**பதிக வரலாறு :** திருச்சேய்ஞலூரில் இறைவரை இனிய இசையமைந்த பதிகத்தினைப் பாடித் துதித்த திருஞான சம்பந்தர் அப்பதியிலுள்ளோர் விருப்பத்திற்கிணங்கி அங்குத் தங்கியிருந்த பின்பு, வெண்மையான பிறைச் சந்திரனையணிந்த செஞ்சடையப்பர் எழுந்தருளியிருக்கும் திருப்பனந்தாளினைச் சென்று தொழுதருளினர். அத்திருப் பனந்தாளில் திருத்தாடகையீச்சரத்தில் பரமனைத் தொழுது சாத்திய அழகிய சொல் மலர்களாலாகிய பதிகமாலை இதுவாகும்.

**பதிகப்பொழிப்புரை :**

*1.* கண் விளங்குகின்ற (தீக்கண்) நெற்றியினையுடையவன், கையில் விளங்கும் ஒரு வெண்மழுவினை யுடையவன், பெண் கலந்த ஒரு பாகத்தினையுடையவன், மிக்க பெருமை யுடைய திருமாலாகிய இடபத்தை உடையவன், விண்ணிலே விளங்குகின்ற பிறைச்சந்திரனைத் தரித்த சிவந்த சடையினையுடைய வேதியனாகிய சிவபெருமானுடைய ஊர் குளிர்ந்த சோலைகள் சூழ்ந்த திருப்பனந்தாள் திருத்தாடகையீச்சரமாகும்.

கண்பொலி நெற்றியினன் என்பது முதலாக இறைவரது பல தன்மைகளை எடுத்துப் போற்றி அத்தகைய பெருமானது இடம் திருப்பனந்தாள் திருத்தாடகையீச்சரமாகும் என்பது இப்பதிகத்தில் நுதலிய பொருளாகும்.

**மால்விடை :** திருமாலாகிய இடபம்; முப்புரம் எரித்த போது திருமால் எருது வடிவெடுத்து இறைவனைத் தாங்கினார். இதனைப் பின்வரும் திருவாசகப் பாட்டால் உணரலாம்.

**கடகரியும் பரிமாவும் தேரும்உகந் தேருதே**
**இடபம்உகந்து ஏறியவா றெனக்கறிய இயம்பேடி**

**நடமதில்கள் அவைமூன்றும் தழலெரித்த அந்நாளில்**
**இடபமதாய்த் தாங்கினன் திருமால்காண் சாழலோ.**

—திருவாசகம், திருச்சாழல் : 15

திருப்பனந்தாள் என்பது ஊரின் பெயர். திருக்கோயிலின் பெயர் திருத்தாடகையீச்சரம் என்பதாம். தாடகை என்னும் பெண்மணி பூசித்துப் பேறு பெற்றதால் போந்த பெயர் என்பர்.

செஞ்சடை வேதியன் என்றது இத்தலத்து இறைவரது பெயரான செஞ்சடையப்பர் என்பதைக் குறித்தது.

². நான்கு வேதங்களை (வேதப் பொருளை) விரித்தவன், தேவர்கள் வந்து வேண்ட முப்புரங்களையும் எரித்தவன், ஏழு உலகங்களிலும் பொருந்திய உயிர்களை ஸம்ஹாரகாலத்தில் பிரித்தவன், சிவந்த சடையின்மீது நிறைந்த பேரொலியோடு பெருக்கெடுத்தோடி வந்த கங்கையினைத் தரித்தவன், (இத்தகைய, சிவபெருமானின் ஊர் திருப்பனந்தாள் திருத்தாடகையீச்சரமாகும்.

**விரித்தவன் நான்மறையை :** திருவிளையாடல் புராணத்தில் வேதத்துக்குப் பொருள் அருள் செய்த திருவிளையாடலைக் குறித்தது என்றும் கொள்ளலாம்.

**வெள்ளம் :** நீர்ப்பெருக்கு, இங்கு கங்கை நதியினைக் குறித்தது. பேரொலியுடன் பெருவேகத்துடன் வந்த கங்கையினைச் செருக்கடங்கத் தம் சடையில் தரித்துக் கொண்டார் சிவபெருமான் என்பது புராண வரலாறு.

3. மான் தோலினை உடையாகத் தரித்தவன், தன்னுடைய திருவடிகளைச் சிந்திக்க வல்லவரது தீவினைகளைப் போக்கித் திருவருள் செய்யவல்ல பிரான், ஒலிக்கின்ற கீதங்களையும் நான்கு மறைகளையும் (தன்னைத் துதிக்கும்படி) உடையவன், விடத்தினை அமுதாகக் கொண்டு உண்டவன்,

தவத்தினில் சிறந்த முனிவரது யாகத்தினை முன்னொரு சமயம் தடுத்தவன், (இத்தகைய) சிவபிரானது ஊர் திருப்பனந்தாள் தாடகையீச்சரமாகும்.

உடுத்தவன் மான் உரிதோல்: புலித்தோல், யானைத் தோல் இவையேயன்றி மான் தோலும் இறைவர்க்கு உடையாக ஆகும்.

1. மானுரி தோல் மிசைத்தோளார் (ஆறும் திருமுறை, கடமன்னு களியானை எனத் தொடங்கும் திருப்பந்தணை நல்லூர் திருத்தாண்டகம்).

2. உடையொன்றிற் புள்ளியுழைத் தோலுங் கொண்டார் உழை—மான். (ஆறும் திருமுறை, சடையொன்றில் எனத் தொடங்கும் தனித்திருத்தாண்டகம்)

என்பன போன்ற அப்பரடிகளின் திருவாக்குகளும் சிவபிரானார் மான் தோலையும் உடையாகக் கொண்டவர் என்பதை வலியுறுத்தும்.

உள்கவல்லார்:— சிந்திக்க வல்லவர்கள்.

மிக்க மாதவர்:— தாருகவனத்து முனிவர். இவர்களது வேள்வியைச் சிவபெருமான் திருமாலை மோகினியுருவமெடுத்துச் செல்லச் செய்து அவர் மூலம் தடுத்தார் என்பது கந்தபுராண வரலாறு. அல்லது தக்ஷன் என்னும் பிரம்மபுத்திரனின் வேள்வியை அழித்தான் என்றும் கொள்ளலாம். இவ்வரலாறும் கந்தபுராணத்துள்ளதேயாம்.

4. உயிர்களைப் பற்றி நின்று விடாது சூழ்ந்த (எளிதில் நீங்காத) வலிய வினைகளும் (பிறக்கும் போதே) உடலில் தோன்றிய பல நோய்களும் நீங்க வேண்டுமென்று விரும்பினால், பாய்ந்து வந்த புனலாகிய கங்கையையும் இளமையான வெண்மதியினையும் (பிறைச் சந்திரனையும்), விடம் பொங்குகின்ற பாம்பினையும் அணிந்து கொண்ட

தொங்குகின்ற சடையினையுடைய சிவபிரானது திருப்பனந்தாள் திருத்தாடகையீச்சரத்தினை மிகவும் துதித்து வணங்குங்கள். சிவபிரானை திருத்தாடகையீச்சரத்தில் வணங்குங்கள் என்று கூறியதாகக் கொள்க.

சூழ்தரு வல்வினை:—இவை உயிரைப் பற்றியவை; உடன் தோன்றிய பல்பிணி:—இவை உடலைப்பற்றியவை; உயிரைப் பற்றிய வினைகளும் உடலைப் பற்றிய நோய்களும் நீங்க வேண்டுமாயின் திருத்தாடகையீச்சரத்துப் பெருமானை ஏத்தித் துதியுங்கள் என்று உலகர்க்கு உபதேசித்தருளினர் ஆசாரிய மூர்த்திகள்.

அனல் பொங்கு அரவு— விஷம் நெருப்பைப் போன்று வெம்மையைக், கொடுமையை விளைவிக்க வல்லது. எனவே விஷம் என்பதை அனல் என்றே கூறினர்.

5. நஞ்சு படிந்த கழுத்தினையுடையவனாய் வெள்ளிய வளையல்களையணிந்த உமாதேவியாரோடு நள்ளிருளில் நடனம் புரிதலையுடையவனான எமது தலைவன் விரும்பிச் சேருகின்ற இடம் படத்தை விரித்து ஆடுகின்ற பாம்பினோடு அலைகள் பல மணிகளையும் அடித்துக் கொணரும் பெருமை பொருந்திய மண்ணியாறு (காவிரியின் கிளை நதி) சூழ்ந்த திருப்பனந்தாள் திருத்தாடகையீச்சரமாகும்.

நள்ளிருள்— மகா சங்கார காலத்திலே எங்கும் இருள் மயமாயிருத்தலின் இங்ஙனம் கூறினர். மகா சங்கார காலத்திலே இறைவி காணுமாறு இறைவன் ஆடுகின்றான். இதனை நள்ளிருளில் நட்டம் பயின்றாடும் நாதனே என்றருளிச் செய்தனர் மாணிக்கவாசகர். (திருவாசகம், சிவபுராணம்: 89-வது வரி)

பின்னிரண்டு வரிகளில் கூறப்பட்ட செய்தியாவது படத்தை விரித்தாடுகின்ற பாம்புகள் உமிழும் நாகரத்தினங்களேயன்றிக் காவிரியின் கிளையான மண்ணியாறும் தனது

அலைகளால் பல வகையான இரத்தினங்களை அடித்துக் கொண்டுவந்து சேர்க்கும்; அத்தகைய நீர்ப்பெருமை யுடைய திருப்பனந்தாள் என்பதாகும்.

**புனல்**—நீர்; இங்கு இடம் நோக்கிக் காவிரியின் கிளை யான மண்ணியாறு என்று பொருள் உரைக்கப்பட்டது.

6. எருதினைத் தனது உயர்ந்த வெற்றிக் கொடியாக உடையவன், தனது திருவடியின் ஒரு பக்கத்திலே விண்ணு லகம் மண்ணுலகமெல்லாம் ஒடுங்கும்படி மிக ஓங்கி ஆட வல்லான், மிகுந்த பல்வகையான பூதப் படைகளையுடை யவன், மாலையாக அமைந்த கொன்றையோடு வன்னி, நெருங்கிய எருக்கு ஆகியவற்றையும் அணிந்த திருச்சடை யினையுடையவன் (இத்தகைய) சிவபெருமானின் ஊர் திருப் பனந்தாள் திருத்தாடகையீச்சரமாகும்.

**விண்ணொடு மண்ணும் எல்லாம் புடைபட** என்றது விண்ணுலகம், மண்ணுலகம் முதலிய அனைத்து உலகங் களும் தன் திருவடியின் பக்கத்திலே தங்கும்படித் தான் பேருரு எடுத்து ஆடுதலைக் குறித்தது. விசுவரூபம் என்று வடமொழியில் கூறுவர்.

7. மலையரசன் பெற்ற பார்வதி தேவியை தனது திரு மேனியில் ஒருபாகமாக உடையவன், வில்லினில் தொடுத்த வெம்மை மிக்க கணையினால் முப்புரங்களை எரித்து உயர்வு பெற்றவன். அலைகள் நிரம்பிய கங்கையாகிய தண்ணீரையும் பிறைச்சந்திரனையும் ஆடுகின்ற பாம்பினையுடைய தலையினை யுடையவன், (இத்தகைய) பெருமானது ஊர் திருப்பனந் தாள் திருத்தாடகையீச்சரமாகும்.

**உகந்தான்:**— உயர்ந்தான்; மகிழ்ந்தான் என்றும் பொருள் கொள்ளலாம்.

**தலையவன்:**— தலையினையுடையவன், அல்லது எல்லோர் க்கும் தலைமையானவன், முதல்வன் என்றும் கொள்ளலாம்.

8. இராவணனது வலியினை ஒரு மென்மையான விரலால் நெருக்கி அழித்தவன், முற்றும் வெண்மையான திருநீற்றினையணிந்த திருமேனியன், உருவம்-அருவம்-அரு உருவம் என்ற மூவகையானவன், புற்றிலே வாழ்கின்ற பாம்பையும், புலியின் உரித்த தோலையும் முறையே கோவண மாகவும் உடையாகவும் உடுத்தவன், இத்தகைய பெரு மானது ஊர் திருப்பனந்தாள் திருத்தாடகையீச்சரமாகும்.

மும்மையினன் என்பதற்கு இம்மை, மறுமை, வீடு என்ற மூன்று நிலையிலும் உயிர்கட்குத்தலைவனாய் இருப்பவன் என்றும் கொள்ளலாம்.

தற்றவன்— உடுத்தவன், தற்றுதல் என்பது ஆடையை இறுக உடுத்தல் என்று பொருள்படுதலைப் பின்வரும் திருக் குறளாலும் அறியலாம்.

குடிசெய்வல் என்னும் ஒருவற்குத் தெய்வம்
மடிதற்றுத் தான்முந் துறும் —திருக்குறள்: 1023

இக்குறளில் மடிதற்று என்னுமிடத்துத் தற்றுதல் என்ப தற்கு இறுக உடுத்தல் என்று பரிமேலழகரால் உரை கூறப் பட்டுள்ளது.

இறைவர்க்குப் பாம்பு கோவணமாகவும் புலித்தோல் அரையில் உடுத்தும் ஆடையாகவும் அமையும்.

9. மலை வில்லாகவும், பாம்பு நாணாகவும், மிகுந்த வெப்பத்தையுடைய தீக்கடவுள் அம்பாகவும் கொண்டு அதனால் உலகத்துக்குத் தீமை செய்த அசுரரது முப்புரங் களையும் அழிவித்தவனாகிய புனிதன், நல்ல தாமரை மலர் மேல் பிரம்மதேவனும் திருமாலும் அறியாத தன்மையன், இத்தகைய பரமனது ஊர் திருப்பனந்தாள் திருத்தாடகை யீச்சரமாகும்.

10. பெருஞ்சோறு உண்ணுகின்ற பயனிலிகளான சமணர்களும், ஐந்து துணிகளைப் போர்த்துத் திரிகின்ற

நீசர்களாகிய பௌத்தர்களும் உரைக்கின்ற மொழிகளை ஏற்றுக் கொள்ளாதீர்கள். நின்மலனாகிய சிவபிரானது ஊர், தாமரை மொட்டுகள் மலர்கின்ற பொய்கைகளில் புள்ளினங்கள் ஓடப், பொழில்களில் மலர்களில் உள்ள தாதுக்கள் (நுண்பொடிகள்) அவிழ்ந்து உதிரும் திருப்பனந்தாள் திருத்தாடகையீச்சரமாகும். (அதனையடைந்து ஈசனை வழிபட்டு நற்கதியடையுங்கள் என்று அறிவுறுத்தியதாம்.) பொய்கைகளில் போதுகள் (மலரும் நிலையில் உள்ள மொட்டுக்கள்) மலரும் போது அங்குத் தங்கியிருந்த புள்ளினங்கள் அஞ்சி ஓடிப் பொழில்களையடைய, அவைகளால் பொழில்களில் உள்ள மலர்கள் தம்மிடத்தேயுள்ள பூந்தாதுக்களைச்சொரியும் திருப்பனந்தாள் எனப் பொய்கையினையும் பொழிலையும் இணைத்துக் கூறியதாகவும் கொள்ளலாம்.

சமணர்கள் பயனிலிகள், புத்தர்கள் நீசர்கள் எனவே அவர்கள் உரைகளும் அத்தன்மையினவே ஆகுமாதலின் அவற்றைக் கொள்ளாது, திருப்பனந்தாள் சென்று செஞ்சடை வேதியனை வழிபடுங்கள் என்ற தனது உரையினைக் கொள்ளுமாறு இப்பாடல் உபதேசிப்பதாகக் கொள்க.

*11.* குளிர்ந்த வயல்கள் சூழ்ந்த திருப்பனந்தாளில் திருத்தாடகையீச்சரத்துக் கோயில் கொண்ட நெற்றிக் கண்ணின் அருகே பிறைச் சந்திரனை அணிந்தவனாகிய பெருமான்தன்னை, சீகாழி மக்களின் தலைவனான விரும்பிய செந்தமிழால் மிக்க திருஞானசம்பந்தன் பாடிய நன்மைபயக்க வல்லதான பண்ணோடு கூடிய பாடல்களைப் பாடவல்லவர்களுடைய வினைப்பற்றுகள் யாவும் அற்றுவிடும்.

**கண் அயலே பிறையான்:** அக்கினியாகிய கண் நெற்றியில் இருப்பதால அதன் பக்கத்தில் அதாவது தலையின் மேல் பிறையை வைத்தவன் என்றார். இதனால் பிறை நெற்றிக் கண்ணுக்கு அருகே உள்ளது என்பது தெரிகிறது.

**நல்ல**—நற்பயனைத் தருகின்ற.

**பண் இயல் பாடல்**—பண் இயலும் பாடல் அதாவது பண்ணோடு கூடிய பாடல் என்பதாம்.

உ
சிவமயம்
சிவனுண்டு பயமில்லை

# திருப்பந்தணைநல்லூர்

பண்-புறநீர்மை] [3-ம் திருமுறை

திருச்சிற்றம்பலம்

இடறினார் கூற்றைப் பொடிசெய்தார் மதிலை
இவைசொல்லி உலகெழுந் தேத்தக்
கடறினா ராவர் காற்றுளா ராவர்
காதலித் துறைதரு கோயில்
கொடிறனார் யாதுங் குறைவிலார் தாம்போய்க்
கோவணங் கொண்டுகூத் தாடும்
படிறனார் போலும் பந்தணை நல்லூர்
நின்றஎம் பசுபதி யாரே. 1

கழியுளா ரெனவுங் கடலுளா ரெனவுங்
காட்டுளார் நாட்டுளா ரெனவும்
வழியுளா ரெனவும் மலையுளா ரெனவும்
மண்ணுளார் விண்ணுளா ரெனவும்
சுழியுளா ரெனவுஞ் சுவடுதா மறியார்
தொண்டர்வாய் வந்தன சொல்லும்
பழியுளார் போலும் பந்தணை நல்லூர்
நின்றஎம் பசுபதி யாரே. 2

காட்டினா ரெனவும் நாட்டினா ரெனவுங்
கடுந்தொழிற் காலனைக் காலால்
வீட்டினா ரெனவுஞ் சாந்த வெண்ணீறு
பூசியோர் வெண்மதி சடைமேல்
சூட்டினா ரெனவுஞ் சுவடுதா மறியார்
சொல்லுள சொல்லுநால் வேதப்
பாட்டினார் போலும் பந்தணை நல்லூர்
நின்றஎம் பசுபதி யாரே. 3

முருகினர் பொழில்சூழ் உலகினர் ஏத்த
மொய்த்தபல் கணங்களின் துயர்கண்(டு)
உருகினர் ஆகி உறுதிபோந் துள்ளம்
ஒண்மையால் ஒளிதிகழ் மேனி
கருகினர் எல்லாங் கைதொழு தேத்தக்
கடலுள்நஞ் சமுதமா வாங்கிப்
பருகினர் போலும் பந்தணை நல்லூர்
நின்றஎம் பசுபதி யாரே. 4

பொன்னினர் கொன்றை யிருவடங் கிடந்து
பொறிகிளர் பூணநூல் புரள
மின்னினர் உருவின் மிளிர்வதோர் அரவம்
மேவுவெண் ணீறுமெய் பூசித்
துன்னினர் நால்வர்க் கறமமர்ந் தருளித்
தொன்மையார் தோற்றமுங் கேடும்
பன்னினர் போலும் பந்தணை நல்லூர்
நின்றஎம் பசுபதி யாரே. 5

ஒண்பொனர் அனைய அண்ணல்வாழ் கெனவும்
உமையவள் கணவன்வாழ் கெனவும்
அண்பினர் பிரியார் அல்லுநன் பகலும்
அடியவர் அடியிணை தொழவே
நண்பினர் எல்லாம் நல்லரென் றேத்த
அல்லவர் தீயரென் றேத்தும்
பண்பினர் போலும் பந்தணை நல்லூர்
நின்றஎம் பசுபதி யாரே. 6

எற்றினர் ஏதும் இடைகொள்வா ரில்லை
இருநிலம் வானுல கெல்லை
தெற்றினர் தங்கள் காரண மாகச்
செருமலைந் தடியிணை 'சேர்வான்

முற்றினர் வாழும் மும்மதில் வேவ
முனிவிலச் சூலமும் மழுவும்
பற்றினர் போலும் பந்தணை நல்லூர்
நின்றஎம் பசுபதி யாரே. 7

ஒலிசெய்த குழலின் முழவம தியம்ப
ஓசையால் ஆடல் அறாத
கலிசெய்த பூதங் கையினா லிடவே
காலினாற் பாய்தலு மரக்கன்
வலிகொள்வர் புலியின் உரிகொள்வர் ஏனை
வாழ்வுநன் றானுமோர் தலையில்
பலிகொள்வர் போலும் பந்தணை நல்லூர்
நின்றஎம் பசுபதி யாரே. 8

சேற்றினார் பொய்கைத் தாமரை யானுஞ்
செங்கண்மா லிவரிரு கூறாத்
தோற்றினர் தோற்றத் தொன்மையை அறியார்
துணைமையும் பெருமையுந் தம்மில்
சாற்றினர் சாற்றி ஆற்றலோ மென்னச்
சரண்கொடுத் தவர்செய்த பாவம்
பாற்றினர் போலும் பந்தணை நல்லூர்
நின்றஎம் பசுபதி யாரே. 9–10

கல்லிசை பூணக் கலையொலி ஓவாக்
கழுமல முதுபதி தன்னில்
நல்லிசை யாளன் புல்லிசை கேளா
நற்றமிழ் ஞானசம் பந்தன்
பல்லிசை பகுவாய்ப் படுதலை யேந்தி
மேவிய பந்தணை நல்லூர்
சொல்லிய பாடல் பத்தும்வல் லவர்மேல்
தொல்வினை சூழகி லாவே. 11

திருச்சிற்றம்பலம்

சுவாமி—பசுபதீசுவரர்] [தேவி—காம்பன்னதோளியம்மை

**பதிகவரலாறு:—** திருப்பளந்தாள் திருத்தாடகையீச்சரத்துக் கோயில் கொண்ட செஞ்சடையப்பனைப் பாடிப் பணிந்த பின் திருப்பந்தணைநல்லூரடைந்து அங்குக் கோயில் கொண்ட பசுபதியாரைப் பாடிப் பரவியது இத்திருப் பதிகம்.

**பதிகப்பொழிப்புரை :**

1. திருப்பந்தணைநல்லூர் என்ற தலத்தில் நிலையாக எழுந்தருளியுள்ள எமது பசுபதியாராகிய சிவபெருமான் 'இயமனை உதைத்தார்' 'முப்புரத்தைப் எரித்துப் பொடியாக்கினார்' என்பன போன்ற புகழ் மொழிகளாகிய இவற்றைச் சொல்லி உலகத்தவர் மிகவும் துதிக்கும்படியாகக் காட்டில் உள்ளவராவர், காற்றில் உள்ளவர் ஆவார், தாம் விரும்பி எழுந்தருளியிருக்கும் கோயில் மேடையில் உள்ளவரும் ஆவார். எதனாலும் குறைவில்லாதவர். தாமே போய்க் கோவணத்தைத் தரித்துக் கொண்டு கூத்தாடும் வஞ்சகரும் ஆவர். (அதாவது எங்குமிருப்பர், எப்படியுமிருப்பர் எனக் குறிப்பிட்டதாம்.)

**இடறினார்** — உதைத்துத் தள்ளினார்.

**கடறு** — காடு, அதில் இருப்பவர் கடறினார். **உலகு** — பொதுவாக உலகத்துள்ள மக்களைக் குறித்ததேயெனினும் சிறப்பு வகையால் உயர்ந்தோரையே குறிக்கும். இது நச்சினார்க்கினியர் போன்ற பண்டைய உரையாசிரியர்களின் கருத்தாகும்.

**கொடிறு** — கோயில் மேடை.

**படிறு** — வஞ்சகம். கோவணங்கொண்டு கூத்தாடுதல் என்பது அமர்நீதி நாயனாரின் சரிதத்தைக் குறித்ததாகவுங் கொள்ளலாம். இதில் வஞ்சகம் என்பது கோவணத்தைத் தாமே மறைத்து விட்டு அமர்நீதியாரிடம் வழக்காடிய செயலாம். போலும் என்பது அசைச்சொல் (பொருள் குறியாது நின்றது)

பசுபதீச்சரர் என்ற இத்தலத்து இறைவன் பெயரையே பதிகத்தில் அமைத்துப் பாடினார். இறைவர் கடல், நாடு, மலை, காடு முதலிய எல்லாமாயும் இருப்பர்; ஆயினும் அவர் அவ்வாறு இருப்பதன் அடையாளம் யாராலும் அறிய வொண்ணாததாகும். அவர் அவ்வாறு இருத்தல் பசுக்களாகிய உயிர்களுக்குப் பதியாய் இருக்கும் தன்மையினாலாம் என்ற பொருளும் பசுபதியார் என்னும் பெயரால் குறிப்பால் அறியப்படுவது காண்க. பதிகப் பாடல்கள் முழுமையும் இவ்வாறே கொள்க.

2. திருப்பந்தணைநல்லூர் என்னும் தலத்தில் நிலைத்து எழுந்தருளியுள்ள எமது பசுபதியாராகிய சிவபெருமான் கடற்கழிகளில் உள்ளார் எனவும், கடலிலே உள்ளார் எனவும், காடுகளிலே உள்ளார் எனவும், நாடுகளிலே உள்ளாரெனவும், வழிகளிலே உள்ளாரெனவும், மலைகளிலே உள்ளாரெனவும், மண்ணுலகத்திலே உள்ளாரெனவும் விண்ணுலகத்திலே உள்ளாரெனவும், நீர்ச்சுழிகளில் உள்ளாரெனவும் இங்ஙனம் தொண்டர்கள் தமது வாய்வந்த வண்ணம் சொல்லும் பழிச் சொற்களையுடையவர் ஆவார். அவர் இம்மாதிரி எல்லாவற்றிலும் இருக்கும் அடையாளம் பிறர் எவராலும் அறியப்படாத தன்மையர் ஆவர்.

கழி — உப்பளம். வழி — பாதைகள், சாலைகள்.

பழியுளார் — தொண்டர்கள் கூறும் சொற்கள் ஒன்றோடொன்று ஒவ்வாமைக்குக் காரணமாய் இறைவர் இருத்தலின் இங்ஙனம் கூறினார் என்பதாம். இவ்வாறன்றி 'பழிச்சுதல்' என்பதற்குப் 'போற்றுதல்' என்னும் ஒரு பொருளும் உண்டாதலின் தொண்டர்களது போற்றுதற் சொற்களில் உள்ளார் என்றும் பொருள் கொள்ளலாம்.

3. திருப்பந்தணைநல்லூர் என்ற இத்தலத்தே நிலை பெற்றுள்ள எமது பசுபதியாராகிய சிவபெருமான் காட்டிலே உறைபவர் எனவும், நாட்டிலே உறைபவர் எனவும், கொடுமையான தொழிலையுடைய இயமனை

உதைத்தவரெனவும், சாந்தம் போன்று வெண்ணீற்றினைப் பூசி ஒரு வெண்மையான பிறைச்சந்திரனைச் சடைமேல் சூட்டிக் கொண்டவரெனவும், எத்தனைப் புகழ்ச் சொற்கள் உண்டோ அத்தனையும் சொல்லப்பெற்ற வேதமாகிய பாட்டில் உள்ளவராவார். (அங்ஙனமிருந்தும்) அப்படித் தாம் எல்லாமாய் இருக்கின்ற அடையாளம் பிறரால் அறியப்படாத தன்மையரும் ஆவர்.

4. திருப்பந்தணைநல்லூரில் நிலைபெற்றுள்ள எமது பசு பதியாராகிய இறைவர் மணம் நிறைந்த பொழில்கள் சூழ்ந்த உலகத்தினர் துதித்து வணங்க, நெருங்கிய பல வகைக் கணங்களின் துயரினைக் கண்டு உருகி, மனஉறுதி யினால் ஒளிவிட்டுப் பிரகாசிக்கின்ற தங்களது உடல்கள் கரு நிறம் அடையப்பெற்றாராகிய திருமால் முதலிய தேவர் களெல்லாம் கைதொழுது வணங்க (அவரது துன்பத்தினைப் போக்க) கடலுள் எழுந்த நஞ்சினை அமுதம் போல் வாங்கிப் பருகினவராவர்.

இத்திருப்பாடல் தேவர்களைக் காக்க விடமுண்ட கருணையையும் அதனை ஒரு விளையாட்டாகச் செய்தமை யையுங் குறித்தது.

**மொய்த்த பல்கணங்கள்** : நெருங்கிப் பணிந்து நின்ற தேவகணங்கள்.

**மேனி கருகினார்** : விடத்தின் வெம்மைக்காற்றுது உடல் நிறம் கருமையாகப் பெற்றவர்கள். திருமால் முதலில் பொன்னிறங் கொண்டவராய் இருந்தார் என்றும் விடத் தின் வெம்மைக்காற்றாது திருமேனி கருகிக் கரிய மாலா யினார் என்றும் கூறப்படுகிறது. இதற்குச் சான்று பின் வரும் அப்பரடிகளின் திருப்பாடலில் காண்க.

**"பருவரை ஒன்று சுற்றி அரவங் கைவிட்ட**
**இமையோரிரிந்து பயமாய்த்**
**திருநெடு மால்நிறத்தை அடுவான் விசும்பு**
**சுடுவானெழுந்து விசைபோய்ப்**

பெருகிட இதற்கோர் பிதிகார மொன்றை
அருளாய் பிரானே எனலும்
அருள்கொடு மாவிடத்தை எரியா மலுண்ட
அவனண்டர் அண்டர் அரசே”

—அப்பர் தேவாரம் (தசபுராணம்)

இவ்வருமைத் திருப்பாடலில் திருநெடுமால் நிறத்தை அடுவான் விசும்பு சுடுவான் எழுந்து விசைபோய்ப் பெருகிட அதாவது திருநெடுமாலின் மேனி நிறத்தை ஒழித்தற் பொருட்டும் விண்ணைச் சுடும் பொருட்டும் எழுந்து பொருந்திய நஞ்சு என்று அப்பரடிகள் கூறியுள்ளமை காண்க.

**கடலுள் நஞ்சு அமுதமா வாங்கிப் பருகினர்** : திருமால் முதலிய தேவர்களனைவரையும் அஞ்சி ஓடும்படிச் செய்த நஞ்சினை அமுதம் உண்பது போல அத்தனை எளிமையாக உண்டார் என்பது கருத்து. அமுதம் உண்பதற்கு எளிமையானது, சுவையானது போலவே இறைவர்க்கு நஞ்சும் மிக எளிமையாய்ச், சுவையுள்ளதாகவாயிற்று என்பதாம். நஞ்சுண்டல் மிக எளிதாகச் செய்யப்பட்ட திருவிளையாடல் என்பதாம்.

5. திருப்பந்தணைநல்லூரில் நிலைபெற்ற எமது பசுபதியாராகிய இறைவர் பொன்னிறம் பொருந்திய கொன்றை மாலை வண்டுகள் கிளர்ந்து ஒலிக்கும்படி மார்பில் கிடந்து அதனுடன் பூணூலும் புரண்டு விளங்க, மின்னல் போல் ஒளியுடன் கூடிய உடலில் விளங்குகின்ற அரவமும் பொருந்திய வெண்ணீறும் பூசித் தன்னை வந்தடைந்த நால்வர்க்கு அறத்தினை விரும்பி அருள்செய்த பழைமையானவர்; உலகத் தோற்றத்தையும் அழிவையும் மாறி மாறிச் செய்பவர் ஆவர்.

இது கல்லாலமரத்தின் கீழ் சனகாதியராகிய நால்வர்க்கு அறமுரைத்த தொன்மைக் கோலத்தை உணர்த்தியது.

**தோற்றமுங்கேடும் பன்னினுர் :** மாறி மாறி உலகைப் படைத்தலும் அழித்தலும் செய்பவர்.

6. திருப்பந்தணைநல்லூரில் நிலைபெற்று எழுந்தருளி யுள்ள எமது பசுபதியாராகிய இறைவர், ஒளி பொருந்திய பொன் போன்ற தலைவரே வாழ்க எனவும் உமையவள் கணவனே வாழ்க எனவும் (நெருங்கி) அணுகப் பெற்றவர் களாகியும் இரவும் பகலும் பிரியாராகியும் அடியவர்கள் திருவடிகளைத் தொழ, பக்தர்களெல்லாம் நன்மையினைச் செய்பவர் என்று துதிக்க, மற்றவர்கள் தீமையைச் செய் பவர் என்று சொல்லும் தன்மையினையுடையவராம்.

**ஒண்பொன்** — ஒளிவிடும் பொன்.

பொன் போன்ற நிறமுடைய திருமேனியுடைய அண்ணல் எனவும் பொன் போன்ற சிறப்புடைய அண்ணல் எனவும் இருவகையிலும் பொருள் கொள்ளலாம். உயர்ந் தவரைக் குறிக்கும் போது அவருக்குப் பொன்னை உவமை யாகக் கூறுதல் மரபு.

**அண்பினுர்** — அணுகப்பெற்றவர்களாகி; **பிரியார்** — பிரியாராகி; இவை இரண்டும் முற்றெச்சமாய் அடியவர் என்ற பெயர்ச்சொல்லுக்கு அடைமொழியாய் நின்றன. அதாவது இறைவனை அணுகப்பெற்றவர்களாகி இரவும் பகலும் பிரியாதாராகிய அடியவர் என்பது பொருள்.

**நண்பினுர் :—** நட்பு, இங்கு பக்தியைக் குறித்தது. எனவே பக்தி செய்பவர்கள் என்பது பொருள்.

இறைவரிடம் பக்தியுடையவர்கள் தமக்கு வருகின்ற இன்ப துன்பங்கள் யாவும் இறைவனது அறக்கருணை, மறக் கருணைகளால் வருவனவே என்றும் தமது வினைகளைத் தீர்த் தற்காகவே இங்ஙனம் இறைவர் செய்கின்றுர் என்றும் அறி வார்களாதலின் எந்நிலையிலும் இறைவரை நன்மையே செய்பவர் என்று துதிப்பர். மற்றவர்களோ என்ருல்

தமக்குத் துன்பம் வந்தபோது இறைவர் தீமை செய்வதாகக் கூறுவர். 'கடவுளே! உனக்குக் கண்ணில்லையா' என்பன போன்றும் நிந்திப்பர். பின்னர் அவர்களே ஏதோ நன்மைக் காகவே இத்துன்பம் முதலில் வந்ததென்று அறிந்த பின்னர் இறைவரைத் துதிப்பர் இக்கருத்தினையே **'நண்பினர் எல்லாம் நல்லரென்று ஏத்த அல்லவர் தீயரென்று ஏத்தும் பண்பினர்'** எனக்குறிப்பிட்டருளினர் ஆசாரியர் என்று கொள்க. இங்ஙனமின்றி **அல்லவர்** என்பதற்குச் சமணர் புத்தர் போன்ற புறச்சமயிகள் எனக் கொண்டு அவர்கள் தீயவர் என்று இகழ்ந்தாலும் அது இறைவர்க்குப் புகழ்ச்சி மொழியேயாம் என்பது கருத்தாகச் சொல்லினும் இழுக் காகாது.

7. திருப்பந்தணைநல்லூர் நிலைபெற்று எழுந்தருளிய எமது பசுபதியாராகிய இறைவர் தங்களுக்கு ஏதும் பயன் கொள்வாரிலில்லையாயினும் பெரிய நில உலகம் வானுலக மனைத்தையும் மோதி அழித்தலைச் செய்தவராகிய பகைவர் கள் காரணமாகப் போரினை மேற்கொண்டு, தமது திருவடி களைச் சேரும் பொருட்டுத் தவம் முற்றினராகிய மூவர்கள் வாழ்கின்ற முப்புரங்களும் (அம்மூவர் தவிர) வேகும்படி முத்தலைச் சூலமும் மழுவாயுதமும் பற்றினவராவார்.

உலகை வருத்துதலைத்தவிர முப்புர அசுரர் அடைந்த பயன் வேறொன்றின்மையின் ஏதும் இடை கொள்வாரில்லை எனக்கூறினர். எற்றினர்—மோதினர், தெற்றினர்:-தெற்றுதல் அழித்தல், எனவே அழித்தலைச் செய்யும் பகைவர் எனப் பொருள்பட்டது.

**அடியிணை சேர்வான் முற்றினர்**-முப்புரத்தினுள் வாழ்ந்த அடியவர்களான மூவர். இவர்கள் சிவதருமம், சிவபூசை வழுவாது சென்னெறியில் நின்றார்களாதலால் இங்ஙனம் கூறினர். முப்புரம் வெந்து எரிந்த போது இம்மூவர்களும் உய்ந்தனர். இச் செய்தியினை பின் வரும் திருவாசகப் பாடல்களாலும் அறிக.

வளைந்தது வில்லு விளைந்தது பூசல்
உளைந்தன முப்புரம் உந்தீபற
ஒருங்குடன் வெந்தவாறு உந்தீபற
உய்யவல் லாரொரு மூவரைக் காவல்கொண்டு
எய்யவல் லானுக்கே உந்தீபற
இளமுலை பங்கன்என்று உந்தீபற.

—திருவாசகம், திருஉந்தியார்— 1 & 4

8. திருப்பந்தணைநல்லூரில் நிலைபெற்றுள்ள பசுபதியாராகிய இறைவர் குழலின் ஒலியும், முழவம் ஒலிக்க அதன் ஓசையும், ஆடலும் நீங்காத மகிழ்ச்சி கூடிய திருக்கயிலாய மலையினைப் பெயர்க்கக் கையினை அதன் கீழ்ச் செலுத்த அது கண்டு காலினால் பாய்ந்து அரக்கனின் வலியினை அழியுமாறு கொள்வர். புலியின் தோலை ஆடையாகக் கொள்வர். நல்ல வாழ்வு உடையவரெனினும் தலையில் பிச்சை கொள்வர்.

**கலி செய்த**—'களி' என்பது எதுகை நோக்கி 'கலி' என மாறியதாகக் கொள்க. அல்லது கலி என்பதற்கு வலிமை என்னும் பொருள் உண்டாகையால் வலிமை மிக்க கயிலாய மலை எனக் கொள்ளினும் அமையும்.

**பூதம்**—இங்கு மலையினைக் குறித்தது. மலையெனப் பொருள்படும் **பூதரம்** என்ற சொல்லின் மரூஉ எனக் கொள்க.

**கையினாலிட**—மலையைப் பெயர்த்தெடுக்கக் கையினை மலையின் கீழ்ச் செலுத்த என்பதாம். கையினைபிட என வர வேண்டியது **கையினாலிட** என்று வந்தது வேற்றுமை உருபு மயக்கம் என்பர் இலக்கண நூலார் 'ஐ' என்னும் இரண்டாம் வேற்றுமை உருபுக்கு பதில் 'ஆல்' என்னும் மூன்றாம் வேற்றுமை உருபு வந்தமை கண்டு கொள்க.

**வாழ்வு நன்றாலும் ஓர் தலையில் பலி கொள்வர்** என்றது செல்வ வாழ்க்கையில் ஒரு குறைவுமில்லாதவராயினும்

மண்டையோட்டில் பிச்சையெடுப்பர் என்று இறைவனுடைய செயல்களின் முரண்பாட்டை எடுத்துக் கூறியதாம்.

9—10. திருப்பந்தணை நல்லூர் நின்ற எமது பசுபதியாராகிய சிவனார், சேறு நிறைந்த பொய்கையில் மலரும் தாமரைமேல் வீற்றிருக்கும் பிரமதேவனும், சிவந்த கண்களையுடைய திருமாலும் ஆகிய இவர்கள் முறையே அன்னம், பன்றி என்று இரண்டு உருவாகத் தோன்றியும் அவர்களிடையே தோன்றிய இறைவனது தோற்றத்தின் பழைமையை அறியாதவர்களாகி தமது துணையையும் பெருமையையுமே தமக்குள் பேசித் தாமே பரம் என்று ஒருவருக்கொருவர் பேசிக் கொண்டார்கள். பிறகு தமது சிறுமையினை இறைவர்க்கு விண்ணப்பித்து, யாம் வலியில்லோம் என்று முறையிட அவர்க்குச் சரண்கொடுத்து அவர்களது பாவத்தை மாற்றியருளினார். (இறைவர் இத்தகைய கருணாமூர்த்தி என்று அருளிச்செய்தார் ஆசாரியர் எனக் கொள்க).

இரு கூறு — இரண்டு வடிவமாக (அன்னம், பன்றி என எடுத்த இரண்டு வடிவங்கள்.)

அறியார் — அறியாராகி, இது முற்றெச்சம் என்பர் இலக்கண நூலார்.

துணைமையும் பெருமையும் — தமது படை வலியும், படைத்தல் - காத்தல் தொழிலைச் செய்தலால் வரும் பெருமையும் குறித்தது.

தம்மில் சாற்றினார் — தமக்குள் மாறுபாடு கொண்டு தம்தம் பெருமையைப் பேசினார்கள்.

சாற்றி ஆற்றலோமென்ற : இங்ஙனம் பேசிப் பின்னர் இறைவனை அறியமாட்டாமையால் யாம் வலியில்லோமென இறைவனிடம் முறையிட.

பாவம் பாற்றினார் :— யாமே வலியோம், யாமே அடிமுடி காண்போம் என்ற ஆணவ முயற்சியே இங்குப் பாவம்

எனப்பட்டு அதனைப் போக்கினர் சிவனர் என்று கூறிய தாகக் கொள்க.

*11.* கற்கும் ஓசைகள் நிறைந்து கலைகளின் ஒலி நீங்காத கழுமலமென்னும் பழைமையான பதியில் தோன்றிய நல்ல பெருமையினையுடையவனும், அற்பர்களின் மொழியைக் கேளாதவனுமாகிய நல்ல தமிழ்வல்ல திருஞானசம்பந்தன், பற்களுடன் கூடிய பிளந்தவாயினையுடைய மண்டை யோட்டினை ஏந்தினவனுகிய சிவபிரான் விரும்பி எழுந்தருளி யுள்ள திருப்பந்தணைநல்லூரைத் துதித்துச் சொல்லிய பாடல்கள் பத்தினையும் வல்லவர்களைப் பழைமையான வினை கள் வந்து சூழும் ஆற்றல் இல்லாதவனவாக ஆகும்.

இப்பதிகத்தினைப் பாடவல்லவர்களைத் தொல்வினைகள் சூழமாட்டா என்பது கருத்து. சூழகிலாவே என்பதில் கில் என்பது ஆற்றல் உணர்த்தும் இடைச்சொல்லாகலின் சூழும் ஆற்றல் இல்லாதனவாக ஆகும் எனப்பொருள் விரித்துக் கூறப்பட்டது.

புல்லிசை — அற்பர்களான புறச்சமயிகளின் வார்த் தைகள் எனப் பொருள்பட்டு நின்றது.

நன்மையைச் செய்யும் தமிழ் ஆகையால் நற்றமிழ் எனக் கூறினர் எனக் கொள்க.

சிவம்

---

**சீராருந் தெய்வத் திருவருளாம் பூமிமுதல்**
**பாராதி ஆண்ட பதியே பராபரமே.**

—தாயுமானவர், பராபரக் கண்ணி : 1

---

உ

சிவமயம்

சிவனுண்டு பயமில்லை

# திருஓமாம்புலியூர்

(பதிகத்தில் திருஓமமாம்புலியூர் என்று வழங்கப்படுகிறது)

பண்—புறநீர்மை] [3-ம் திருமுறை

திருச்சிற்றம்பலம்

பூங்கொடி மடவாள் உமையொரு பாகம்
புரிதரு சடைமுடி யடிகள்
வீங்கிருள் நட்டம் ஆடுமெம் விகிர்தர்
விருப்பொடும் உறைவிடம் வினவில்
தேங்கமழ் பொழிலில் செழுமலர் கோதிச்
செறிதரு வண்டிசை பாடும்
ஓங்கிய புகழார் ஓமமாம் புலியூர்
உடையவர் வடதளி யதுவே. 1.

சம்பரற் கருளிச் சலந்தரன் வீயத்
தழலுமிழ் சக்கரம் படைத்த
எம்பெரு மானார் இமையவ ரேத்த
இனிதினங் குறைவிடம் வினவில்
அம்பர மாகி அழலுமிழ் புகையின்
ஆகுதி யால்மழை பொழியும்
உம்பர்கள் ஏத்தும் ஓமமாம் புலியூர்
உடையவர் வடதளி யதுவே. 2.

பாங்குடைத் தவத்துப் பகீரதற் கருளிப்
படற்சடைக் கரந்தநீர்க் கங்கை
தாங்குதல் தவிர்த்துத் தராதலத் திழித்த
தத்துவன் உறைவிடம் வினவில்
ஆங்கெரி மூன்றும் அமர்ந்துட னிருந்த
அங்கையால் ஆகுதி வேட்கும்
ஓங்கிய மறையோர் ஓமமாம் புலியூர்
உடையவர் வடதளி யதுவே. 3.

புற்றர வணிந்து நீறுமெய்ப் பூசிப்
    பூதங்கள் சூழ்தர ஊரூர்
பெற்றமொன் றேறிப் பெய்பலி கொள்ளும்
    பிரானவன் உறைவிடம் வினவில்
கற்றநால் வேதம் அங்கமொ ருறுங்
    கருத்தினுர் அருத்தியால் தெரியும்
உற்றபல் புகழார் ஓமமாம் புலியூர்
    உடையவர் வடதளி யதுவே. 4.

நிலத்தவர் வானம் ஆள்பவர் கீழோர்
    துயர்கெட நெடியமாற் கருளால்
அலைத்தவல் லசுரர் ஆசற ஆழி
    அளித்தவன் உறைவிடம் வினவில்
சலத்தினுற் பொருள்கள் வேண்டுதல் செய்யாத்
    தன்மையார் நன்மையால் மிக்க
உலப்பில்பல் புகழார் ஓமமாம் புலியூர்
    உடையவர் வடதளி யதுவே. 5.

மணந்திகழ் திசைகள் எட்டும் ஏழிசையும்
    மலியும் ஆறங்கம் ஐவேள்வி
இணைந்தநால் வேதம் மூன்றெரி இரண்டு
    பிறப்பென ஒருமையால் உணரும்
குணங்களும் அவற்றின் கொள்பொருள் குற்ற
    மற்றவை யுற்றது மெல்லாம்
உணர்ந்தவர் வாழும் ஓமமாம் புலியூர்
    உடையவர் வடதளி யதுவே. 6-7.

தலையொரு பத்துந் தடக்கைய திரட்டி
    தானுடை அரக்கனொண் கயிலை
அலைவது செய்த அவன்திறல் கெடுத்த
    ஆதியார் உறைவிடம் வினவில்

மலையென வோங்கும் மாளிகை நிலவும்
மாமதில் மாற்றல ரென்றும்
உலவுபல் புகழார் ஓமமாம் புலியூர்
உடையவர் வடதளி யதுவே. 8.

கள்ளவிழ் மலர்மேல் இருந்தவன் கரியோன்
என்றிவர் காண்பரி தாய
ஒள்ளெரி யுருவர் உமையவ ளோடும்
உகந்தினி துறைவிடம் வினவில்
பள்ளநீர் வாளை பாய்தரு கழனிப்
பனிமலர்ச் சோலைசூழ் ஆலை
ஒள்ளிய புகழார் ஓமமாம் புலியூர்
உடையவர் வடதளி யதுவே. 9.

தெள்ளியர் அல்லாத் தேரரோ டமணர்
தடுக்கொடு சீவரம் உடுக்கும்
கள்ளமார் மனத்துக் கலதிகட் கருளாக்
கடவுளார் உறைவிடம் வினவில்
நள்ளிருள் யாமம் நான்மறை தெரிந்து
நலந்திகழ் மூன்றெரி யோம்பும்
ஒள்ளியார் வாழும் ஓமமாம் புலியூர்
உடையவர் வடதளி யதுவே. 10.

விளைதரு வயலுள் வெயில்செறி பவள
மேதிகள் மேய்புலத் திடறி
ஒளிதர மல்கும் ஓமமாம் புலியூர்
உடையவர் வடதளி அரனைக்
களிதரு நிவப்பிற் காண்டகு செல்வக்
காழியுள் ஞானசம் பந்தன்
அளிதரு பாடல் பத்தும்வல் லார்கள்
அமரலோ கத்திருப் பாரே. 11.

திருச்சிற்றம்பலம்

சுவாமி—துயரந்தீர்த்த நாதர்] [தேவி—பூங்கொடி நாயகி

**பதிகவரலாறு:—** பந்தணைநல்லூர்ப் பசுபதியாரைப் பணிந்து பாடிய பிள்ளையார் அங்கு நின்றும் புறப்பட்டுத் தீங்கு தீர் மாமறைச் செம்மையந்தணர் புகழுடன் ஓங்கும் ஓமமாம்புலியூர் சென்றடைந்து அப்பதியில் வடதளியென்னும் திருக்கோயில்மேவிய அற்புதப்பெருமானை அடிபணிந்து பாடிய அலர்ந்த செந்தமிழ்ச் சொற்றொடை இப்பதிகமாகும். இவ்வருமைத் திருப்பதிகத்தில் நான்மறை அந்தணர் வேள்வித்திறத்தினைப் பாராட்டியருளினர்.

**பதிகப்பொழிப்புரை :**

1. பூங்கொடி போல்வாராகிய உமையம்மையார் தங்கிய ஒரு பாகத்தையும், புரியுடன் கூடிய சடைமுடியையும் கொண்ட அடிகளும், அடர்ந்த இருளில் நடனமாடும் எமது விகிர்தருமான சிவபிரான் விருப்பத்துடன் உறைகின்ற இடம் எதுவெனக் கேட்டால், இனிய மணங் கமழும் சோலைகளில் உள்ள செழுமையான மலர்களைக் குடைந்து நெருங்கிக் கூட்டமாயமைந்த வண்டுகள் இசை பாடுகின்ற ஓங்கிய புகழினையுடைய மறையவர்களது ஓமமாம்புலியூரில் உடையவர் வடதளி என்னும் திருக்கோயிலாகும்.

**சடைமுடி அடிகள்:**—நம: கபர்த்தினே-சடைமுடியுடையவனுக்கு வணக்கம் என்று வேதம் தோத்திரிக்கும். சடைமுடி சிவபிரானுக்கே உரிய சிறப்படையாளம். ஞானத்தின் அடையாளமாம்.

**விகிர்தர்:**—மாறுபட்ட இயல்புடையவர்.

**தேங்கமழ்:**— இனிமையான மணம் வீசும்

**கோதுதல்:**—குடைதல், கிளறுதல்

**செறிதரு:**—நெருங்கித் திரண்ட, கூட்டமாயமைந்த

**ஓங்கிய புகழார் ஓமமாம்புலியூர்:**—தீங்குதீர்மாமறைச் செம்மை அந்தணர் ஓங்கும் ஓமமாம்புலியூர் எனச் சேக்கிழார் பெருமான் இதனை விரித்துள்ளார். கற்றநூல்

வழியே நின்று எரியோம்பி உலகில் தீமைகள் வாராது காக்கும் செம்மையினுல் அவர்களை ஓங்கிய அதாவது மேல் மேலும் உயர்ந்து விளங்குகின்ற புகழினையுடையவர் என்ருர். அத்தகைய அந்தணர்கள் வாழ்ந்த ஓமமாம்புலியூர் என்பது கருத்து.

ஊரின் பெயர் ஓமமாம்புலியூர் என்றும் திருக்கோயிலின் பெயர் வடதளி என்றும் கொள்க. அனைத்துலகையும் தமக்கு உடைமையாகவும், அனைவரையும் தமக்கு ஆளாகவும் கொண்டதால் இறைவர் உடையவர் எனப்படுவர். எனவே அவரது வடதளி உடையவர் வடதளி எனக்கூறப்பட்டது.

அந்தணர்கள் இடையருது ஓமம் செய்வதாலும், புலிக்கால் முனிவர் வழிபட்டதாலும் ஓமமாம்புலியூர் என வழங்கப்பட்டது. தற்காலம் ஓமாம்புலியூர் என்று வழங்கப்படுகிறது.

2. சம்பரன் என்னும் அசுரனுக்கு அருள் செய்தும், சலந்தரன் என்னும் அசுரன் அழியும்படி நெருப்பினை உமிழ்கின்ற சக்கரத்தைப் படைத்தவருமான எமது சிவபெருமானுர் தேவர்கள் எல்லாம் வணங்கித் துதிக்க இனிதாக உறைகின்ற இடம் எதுவெனக் கேட்பின், விண்ணளவு சென்று ஓமத்தீ உமிழ்கின்ற புகைக்குக் காரணமான வேள்விகளால் மழைபொழிகின்ற, தேவர்கள் போற்றிக் கொண்டாடுகின்ற திருஓமமாம்புலியூரில் உடையவர் வடதளி என்னும் திருகோயிலாகும்.

மழை பொழியும், உம்பர்கள் ஏத்தும் ஓமமாம்புலியூர் என்பதாம்.

**சம்பரன்:**—இவன் ஒரு அசுரன், மன்மதனுக்குப் பகைவன் என்பர். இக்காரணம் பற்றி மன்மதன் சம்பராரி எனப் பெயர்பெற்ருன்.

**சலந்தரன்:**—இவனும் ஒரு அசுரன். இவனை அழிப்பதற்காகப் படைத்த சக்கராயுதமே பின்னர் சுதர்சனம் என்ற பெயருடன் திருமாலுக்குச் சிவபிரானால் அருள் செய்யப் பட்டது. இதுபற்றி இப்பதிகம் ஐந்தாவது திருப்பாடலிலும் குறிப்பிட்டுள்ளார். இவ்வரலாறு கந்தபுராணம், தக்ஷ காண்டம், ததீசி உத்தரப் படலத்தில் விரிவாகக் கூறப்பட்டுள்ளது. சமயம் நேரும் போது சுருக்கமாக நமது தமிழ் மாலையிலும் கொடுக்கப்படும்.

**அம்பரம் ஆகி:**—ஆகாயத்தினையடைந்து

**ஆகுதி:**—வேள்வித்தீயில் இடப்படும் நெய், சமித்து போன்றவைகள். இங்கு வேள்விகள் எனப் பொருள்பட்டு நின்றது. இதனை ஆகுபெயர் என்பர் இலக்கண நூலார்.

**ஆகுதியால் மழை பொழியும்:**—வேள்விகள் மழைக்குக் காரணம் என்பதைக் கூறியருளியவாறு கண்டு கொள்க.

மழை பொழிதலால் நாடு வளமடைதலால் அதற்குக் காரணமான வேள்விகள் புரியும் அந்தணர்களைத் தேவர்களும் போற்றுவர் என்பதைக் குறிக்க **உம்பர்களேத்தும் ஓமமாம்புலியூர்** என்றருளிச் செய்தனர் என்க.

3. சிறந்த குணமுடைய பகீரதனுடைய தவத்திற்கு அருள் செய்து தனது படர்ந்த சடையில் மறைத்தருளிய கங்கை நதியினைத் தாங்குதலைத் தவிர்த்துப் பூமியில் சிறிய அளவாக விழும்படிச் செய்த தத்துவனாகிய சிவபெருமான் விரும்பி உறைகின்ற இடம் எதுவெனக் கேட்கின், தீ அமர்ந்த தமது அழகிய திருக்கைகளால் மூன்று எரி வளர்த்து வேள்விகள் செய்கின்ற புகழினால் உயர்ந்த வேதியர்களுடைய திருஓமமாம்புலியூரில் உடையவர் வடதளி என்னும் திருக்கோயிலாகும்.

மிகவும் வேகமாகப் பூமியில் வீழ்ந்த கங்கையினைத் தமது சடையினில் தாங்கிக் கொண்ட பரமேச்வரன்

மீண்டும் பகீரதனது வேண்டுகோட்கிரங்கிப் பூமியில் சிறிய அளவாக விழச் செய்தார் என்பது புராணவரலாறு.

**தத்துவன்:**—தத்துவ சொரூபியாய் இருப்பவன்.

**எரிமூன்று:**—ஆஹவனீயம், காருகபத்தியம், தட்சிணுக்கினி என்று மூவகையாகச் சொல்லப்படும் வேள்வித்தீயாம்.

**ஆகுதி:**—இப்பாடலிலும் இச்சொல் வேள்வி என்றே பொருள்படும்.

எரி மூன்றும் அமர்ந்து உடனிருந்த அங்கை என்றது வேதியர்களது வலது கையில் அக்னியுள்ளது என்ற வழக்கு பற்றியாம்.

**ஓங்கிய மறையோர்:** உலகம் துன்பந்தீர்ந்து வாழ வேள்வி செய்தார்களாதலின் அவர்களை உயர்ந்தவர்கள் எனக்குறிப்பிட்டார் எனக் கொள்க.

4. புற்றில் வசிக்கும் இயல்புடைய பாம்புகளை அணிகலன்களாகக் கொண்டு வெண்மையான திருநீற்றினை உடல் முழுதும் பூசிப் பூதகணங்கள் புடைசூழ எருதின் மேலேறிக் கொண்டு ஊரூராகச் சென்று பிச்சை ஏற்கும் பெருமானுகிய சிவபிரான் இனிதாகத் தங்கியிருக்குமிடம் யாதெனக் கேட்கின், தாங்கள் கற்ற நான்கு வேதங்கள் ஆறு அங்கங்கள் இவற்றின் கருத்தையுணர்ந்தவர்களாய், (அதனுல் ஏற்பட்ட) அன்பினுல் விளக்கமாகத் தெரிகின்றதாய் உண்டான பல வகையான புகழ்களையுடையோரது ஓமமாம்புலியூரில் உடையவர் வடதளி என்னும் திருக்கோயிலேயாகும்.

கருத்தினுர் அருத்தியால் தெரியும் உற்றபல்புகழார் ஓமமாம்புலியூர் எனக் கொள்க.

**பெய் பலி கொள்ளும் பிரான்:**— பிச்சையெடுத்தாலும் அவரே தலைவர் என்ற குறிப்பு காண்க.

**கருத்தினுர்:**—கருத்தை உணர்ந்தவர்கள்.

**அருத்தி:**—அன்பு.

5. நிலவுலகில் வசிப்பவர்கள், வானுலகினை அரசாட்சி செய்பவர்கள், பாதாளவுலகத்தினர் ஆகியோரது துன்பம் கெடவும், அவர்களைத் துன்புறுத்திய அசுரராகிய குற்றம் அழியவும் திருவருளுடன் நெடியவனான திருமாலுக்குச் சக்கராயுதத்தினை அளித்தருளிய சிவபிரான் இனிதாக எழுந்தருளியிருக்குமிடம் எதுவெனக் கேட்பின், தீயவினைகளால் பொருள் சேர்த்தலைச் செய்யாத தன்மையுடையவர்களாய் மிகுந்த நற்குணங்களால் என்றும் அழியாத பல்விதமான புகழ்களையுடையவர்களது ஓமமாம்புலியூரில் உடையவர் வடதளியென்னும் திருக்கோயிலாகும்.

நெடியமாற்கு அருளால் ஆழியளித்தவன் :— அசுரர்களால் உலகிற்கு ஏற்படுகின்ற துன்பத்தைத் தீர்க்க ஒரு சிறந்த ஆயுதம் (சக்கரம்) பெறவேண்டித் திருமால் தமது கண்ணையே மலராக இட்டு வழிபட்டார் என்றும் அதற்கு மகிழ்ந்த பரமன் அவர் முன்தோன்றிச் சலந்தராசுரனை அழிக்கத் தாம் படைத்த சக்கராயுதத்தைச் சுதர்சனம் என்ற பெயருடன் தமது திருவருளுடன் அளித்தார் என்றும் புராணங்கள் கூறும்.

இவ்வரலாறு கூறும் பாடல்கள் பல இருப்பினும் ஒரு திருவாசகப் பாடலினை மட்டும் ஈண்டுத் தருவோம்.

**சலமுடைய சலந்தரன்தன் உடல்தடிந்த நல்லாழி**
**நலமுடைய நாரணற்கன்று அருளியவாறு என்னேடீ**
**நலமுடைய நாரணன்தன் நயனமிடந்து அரனடிக்கீழ்**
**அலராக இடஆழி அருளினன்காண் சாழலோ.**

—திருவாசகம், திருச்சாழல்: 18

(இதன் பொருள்) தீவினைகளையுடைய சலந்தரனது உடலைத் தடிந்து இரு கூறுகளாக்கிய உயர்ந்த சக்கராயுதத்தைத் திருமாலுக்கு அருளிச் செய்தது என்னே? நன்மையுடைய திருமால் தனது கண்ணினையகழ்ந்து சிவபிரானின்

திருவடிக்கீழே மலராக இட்டு அருச்சிக்க அதனால் மகிழ்ந்த சிவபெருமான் அவர்க்கு அதனை அருளினான் என்பதைக் கண்டு கொள்வாயாக.

இது சாழல் என்னும் பண்டையமகளிர் விளையாட்டில் ஒரு பெண் வினவ, மற்றொரு பெண் பதில் கூறுவது போல் அமைந்த திருப்பாடலாகும். இதில் திருமால் சிவபிரானை வழிபட்டுச் சக்கரம் பெற்ற வரலாறு கூறப்பட்டுள்ளது.

இத்திருப்பாடலின் பிற்பகுதியில் திருஓமமாம்புலியூர் வாழும் அந்தணர்களது சிறப்பினைக்கூறியருளினார் திருஞான சம்பந்தர். அவ்வந்தணர்கள் தீவினைகளால் பொருள்களைப் பெறுதலை என்றும் வேண்டாத இயல்பினர். நற்குணங்களை மிகப் பெற்றவர். இக்காரணம் பற்றி அவர்கள் அழியாப் புகழோடு வாழ்ந்தார்கள். அத்தகையோரது பதி ஓமமாம் புலியூர். அதனுள் உடையவர் வடதளி எனப்பெயர் பெற்ற திருக்கோயிலே இறைவனது உறைவிடம் என்று கொள்க.

**சலம்** :- தீயவினைகள்; இச்சொல் இப்பொருள் தருதலைக் கீழ்க்கண்ட திருக்குறளாலும் அறிக.

**சலத்தாற் பொருள்செய்தே மார்த்தல் பசுமண்**
**கலத்துள்நீர் பெய்திரீஇ யற்று.**

—திருக்குறள்: 660.

இக்குறளில் வரும் **சலத்தால்** என்ற சொல்லுக்கு தீய வினைகளால் எனப் பரிமேலழகர் உரை வகுத்துள்ளார்.

மேலும் மற்றொரு குறளிலும் ‘**வறுமையுற்ற காலத்தும் தமது குடிமரபினோடு ஒத்து வாழக் கடவோம் என்று வாழ்பவர் வஞ்சனையைப் பொருந்தி அமைவிலவாய தொழில்களைச் செய்யார்**’, எனக் கூறியுள்ளார். அக்குறளையுங் காண்க.

**சலம்பற்றிச் சால்பில செய்யார் மாசற்ற**
**குலம்பற்றி வாழ்துமென் பார்.**

—திருக்குறள்: 956.

6-7. எட்டுத் திசைகளும் புகழ்மணங் கமழ்கின்றதும், ஏழிசைகள் மலிந்துள்ளதும், ஆறு அங்கங்களும் ஐந்து வேள்விகளும் பொருந்தியவையுமான நான்கு வேதங்கள் மூன்று எரிகள், இரண்டு பிறப்புக்கள் என இவற்றை ஒருமைப்பாட்டுடன் கூடிய அறிவினால் உணர்ந்து கொள்ளும் குணங்களும் அவற்றினால் கொள்ளப்படும் பொருள்களும் குற்றமற்றவைகளாக உள்ளவற்றையெல்லாம் உணர்ந்து தெளிந்தவர்களான அந்தணர்கள் வாழுகின்ற திருஓமமாம் புலியூரில் உடையவர் வடதளி என்னும் திருக்கோயிலே இறைவரது உறைவிடமாகும்.

மணந்திகழ் திசைகளெட்டும் — திசைகள் எட்டும் திகழ் மணம் என மாற்றி உரைத்துப் பொருள் கொள்க. இங்கு மணம் புகழினைக் குறித்தது. வேதங்கள் எண்டிசையோராலும் புகழப்படுபவை என்பது கருத்து.

ஏழிசை : ஏழு இசைகள் இங்கு வேதமந்திரங்கட்குரிய ஏழு சந்தங்களைக் குறிக்கும். இவை காயத்திரி, உஷ்ணிக், அனுஷ்டுப், த்ருஷ்டுப், ப்ருஹதி, பங்க்தி, ஜகதி என்பனவாம். மந்திரங்களுடைய எழுத்துக்களின் எண்ணிக்கை கொண்டு இவை நிர்ணயிக்கப்படும்.

ஆறுஅங்கம், ஐவேள்வி, நால்வேதம்:— இவைபற்றி முன் உரைத்தவை கண்டு கொள்க.

மூன்றெரி: – இவை ஆஹவனீயம், தக்ஷிணாக்னி, கார்ஹபத்யம் என்பனவாம். இவற்றின் விளக்கம் :

1. ஆஹவனீயம் : வேள்விச்சாலையின் கிழக்கில் நாற்கோண வடிவில் அமைக்கப்பட்ட குண்டத்தில் வளர்க்கப்படும் எரியாகும். இது தேவர்கட்கு உரியதாகும்.

2. தக்ஷிணாக்னி : தெற்கில் அரைச்சந்திர வடிவமாக அமைக்கப்பட்ட குண்டத்தில் வளர்க்கப்படுவது. இது பிதிரர்களுக்குரியது,

3. கார்ஹபத்யம் : ஆஹவனீயத்தையடுத்து வட்ட வடிவமான குண்டத்தில் வளர்க்கப்படுவது. இல்வாழ்வோர்க்குரியதாதலின் இப்பெயர் பெற்றது இது இல்வாழ்வோனுல் என்றும் போற்றி ஓம்பப்படுவது. இதனை மகன் தந்தையிடமிருந்து பெற்று தன்னுடைய சந்ததிக்கு அளித்தல் மரபு.

**இரு பிறப்பு:**—இருமுறை பிறத்தல். வேதியர்கள் தாயின் வயிற்றினின்றும் பிறந்தபோது ஒரு பிறப்பையும், உபநயனம் என்னும் சடங்கு மூலம் பிரம்மோபதேசம் என்னும் காயத்திரி மந்த்ரோபதேசம் பெறும்போது இரண்டாவது பிறப்பையும் அடைகிறுர்கள் என்னும் வழக்கு பற்றி **'த்விஜர்'** அல்லது இருபிறப்பாளர் எனப்படுவர்.

**குணங்களும் அவற்றின் கொள் பொருளும்** என்றது குணங்களால் கொள்ளப்படும் போகங்கள். வேத நெறி நின்று ஐம்பெரு வேள்விகளைச் செய்து முத்தீவளர்ப்போர் பெறும் போகங்கள் எக்காலத்தும் குற்றமுடையவையாகா என்பதால் **குற்றமற்றவையுள்ளதுமெல்லாம் உணரும்** எனக் கூறினுர் என்க. இங்ஙனம் கொள்ள **குற்றம் + அற்றவையெல்லாம்** எனப்பிரித்து உரை காண்க

இனி இவ்வாறன்றி வேதங்கள் கொள்ளத்தக்க ஒழுக்கங்களை **விதி** என்றும் தள்ள வேண்டியவைகளை **நிஷேதம்** அல்லது **விலக்கு** என்றும் கூறுதலால் **குணங்களும்** அவற்றின் **குற்றம்** மற்று அவையெல்லாம் உணர்ந்து அவற்றின் படியே தாமும் ஒழுகி உலகத்தவரையும் ஒழுக வைக்கும் சிரியர் வாழும் ஓமமாம்புலியூர் எனக் கொள்வதும் பொருத்தமாகலாம். இங்ஙனம் கொள்ள **குற்றம் + மற்றவை** எனப் பிரித்துக் கொண்டு உரை கொள்ளல் வேண்டும்.

இவ்வருமைத் திருப்பாடலில் முதல் இரண்டு அடிகளில் எட்டு முதலாக ஒன்று வரை உள்ள எண்களைக் கீழ் வரிசை படக் கோத்த எண்ணலங்காரம் அமைந்துள்ளது இன்புறத் தக்கது.

திருஞானசம்பந்தமூர்த்திகளின் திருவடித்தாமரைகளைப் பலமுறை துதித்து, பலமுறை இப்பாடலைப் படித்து சிற்றறிவுக்கு அவர் பாதம் உணர்த்தியவாறு பொருளுரைக் கப்பட்டது. வேறு பொருள் காணும் அறிஞர் தக்க காரணங்கடளுன் எழுதியனுப்பினால் அதுவும் பிரசுரிக்கப் படும்.

8. பத்துத்தலைகளும் அதைப்போல இருமடங்கு நீண்ட கைகளும் உடையவனாகிய அரக்கன் (இராவணன்) ஒளி பொருந்திய திருக்கயிலை மலையினை அசைக்கத் தொடங்கிய அவனது வலிமையினைக் கெடுத்த ஆதியார் ஆகிய சிவபெருமான் விரும்பி எழுந்தருளியிருக்கும் இடம் எதுவென்று வினவில், மலை போல ஓங்கியுயர்ந்த மாளிகையும் அதனுடன் நிலவுகின்ற பெரிய மதிலும் கூடிய செல்வநிலை என்றும் மாறாதவராய் விளங்குகின்ற பல்வகையான புகழ்களையுடையவர்கள் (அந்தணர்கள்) வசிக்கின்ற திருஓமமாம்புலியூரில் உடையவர் வடதளி என்னும் திருக்கோயிலாகும்.

ஆதியார்—எல்லா உலகங்களுக்கும் தோற்றுதற் கர்த்தாவாகிய சிவபெருமான். மஹாசங்கார காலத்திலே எல்லா உலகங்களும் இறைவனிடத்தே ஒடுங்கி நின்று மீளவும் சிருட்டிக் காலத்தே அவரிடத்தினின்றும் தோன்றி உளவாம் என்பது ஞான நூல்களின் முடிவு. ஆதி — தொடக்கம்; இது மீளத் தோன்றுதற்கு இடமாய் நிற்கின்ற நிலையினைக் குறித்தது.

கல்விச்செல்வம், வேள்விச்செல்வம் போன்றவற்றுடன் பொருட்செல்வமும் பெற்று அக்கால அந்தணர்கள் வாழ்ந்தனர் என்பது இப்பாடலால் அறியப்படுகிறது.

9. தேன் ததும்புகின்ற தாமரை மலர் மேல் இருந்தவனான பிரம்மதேவனும், கருநிறமுடைய திருமாலுமாகிய இவ்விருவரும் காண்பதற்கு அரியதாகிய ஒளிமிக்கதீப்பிழம்பு வடிவமானவரான சிவபிரான் உமாதேவியாரோடு மகிழ்ந்து

இனிது உறைகின்ற இடம் எதுவென்று வினவினல், வாளை மீன்களுடன் பள்ளத்தை நோக்கிப் பாய்கின்ற நீர்வளம் மிக்க கழனிகளும் குளிர்ச்சி பொருந்திய மலர்ச்சோலைகள் சூழ்ந்த கரும்புச் சோலைகளும் நிறைந்ததான மேன்மை மிக்க புகழ்களையுடையவர்களது திருஓமமாம்புலியூரில் உடையவர் வடதளி என்னும் திருக்கோயிலாகும்.

பள்ளம்—ஆழம்; நீர் மேட்டிலிருந்து பள்ளத்தினை நோக்கிப் பாயும் இயல்புடையது. அங்ஙனம் பாயும் போது கூடவே வாளை மீன்களும் பாய்கின்ற என்றதாம். ஆலை—கரும்பு; கருப்பஞ்சாறு பிழியும் இடமுமாம்.

ஒள்ளிய — ஒளிமிக்க, அறிவு பொருந்திய, மேன்மை மிக்க, மாசற்ற, நன்மையுடைய என்று பலவகையாகப் பொருள் கொள்ளலாம்.

புகழார்—புகழையுடையவர்கள். இடம் நோக்கி இங்கு இத்தலத்து அந்தணர்களைக் குறித்து நின்றது.

10. தெளிந்த அறிவுடையவரல்லாத சீவரப் போர்வை உடுக்கும் பௌத்தர்களும், தடுக்கினை உடுக்கும் சமணர்களும் ஆகிய பொய்ம்மை நிறைந்த மனமுடைய கீழ் மக்களுக்கு அருள்புரியாத கடவுளாகிய சிவபெருமான் விரும்பி எழுந்தருளியிருக்கும் இடம் எதுவென வினவில், நள்ளிருள் யாமம் முதலிய அவ்வக்காலங்கட்கேற்றபடி நான்மறையில் கூறிய தெய்வ மந்திரங்களை முறையறிந்து ஓதிப் பெருமையுடன் திகழ்கின்ற மூன்று எரிகளையும் வளர்த்து அக்கினி காரியஞ் செய்கின்ற மேன்மையுடையவர் வாழுகின்ற திருஓமமாம்புலியூரில் உடையவர் வடதளி என்னும் திருக்கோயிலாகும்.

தெள்ளியரல்லார்:—தெளிந்த அறிவுடையவர்களல்லாத புத்தரும் சமணரும், **தேரர்** — பௌத்தர்கள்; **அமணர்**— சமணர்கள், தடுக்கு : பாய், இதனை உடுப்பவர் சமணர். சமணகுருமார்களில் சிலர் ஆடையின்றியே இருப்பர். சிலர்

பாய் போன்ற முரட்டு ஆடையினை உடுத்துவர். **'தவ மென்று பாயிடுக்கித் தலைபறித்து நின்றுண்ணும் அவம்'** என்று சேக்கிழார் பெருமானும் திருநாவுக்கரசு நாயனர் புராணத்தில் அருளிச் செய்துள்ளார். (பெரிய புராணம்— திருநாவுக்கரசு நாயனர் புராணம், 47-வது திருப்பாடல்).

**சீவரம்** —சீவரப் போர்வை; ஒருவித காவி நிறம் ஊட்டப் பெற்ற ஆடைகளைப் போர்வையாக உடல் முழுவதும் மறையும்படி போர்த்துக் கொள்வது புத்தர்களின் வழக்கம். துவர் ஆடையர் என்றும் கூறப்படுவர்.

**கலதிகள்**— கலகம் செய்பவர், கீழ்மக்கள்; மூதேவிகள் என்றும் பொருள் உண்டு. **'கலதிவாய் அமணர்கள்'** என்பது சேக்கிழார் வாக்கு. (பெரியபுராணம், திருஞானசம்பந்தர் புராணம், 821-ம் திருப்பாடல்).

**நள்ளிருள்......... ஒள்ளியார்** என்றது ஒவ்வொரு குறிப்பிட்ட காலங்கட்கும் விதிக்கப்பட்ட மந்திரங்கள் இன்னின்னவை என்று நான்கு வேதங்களின் மூலம் அறிந்து அவற்றை அவ்வக்காலங்களில் ஓதுதலையும், கலியின் கொடுமையினை ஒழித்து நன்மையினைச் செய்யும் மூவெரி ஓம்புதலையும் கைக்கொண்டவர்கள் என்றுகூறியதாம் எனக் கொள்க. மூவெரியின் விளக்கம் ஆருவது திருப்பாடல் உரையில் காண்க.

**ஒள்ளியார்** -அறிவுடையவர்கள், மாசற்றவர்கள்; இங்கு ஓமமாம்புலியூரில் வாழ்ந்த அந்தணர்களைக்குறித்து நின்றது.

*11.* விளைச்சலைத் தருகின்ற வயல்களில் ஒளிமிக்க பவளங்கள், எருமைகள் மேய்கின்ற இடங்களில் அவைகளால் இடறப்பட்டு, ஒளி வீசுகின்ற திருஓமமாம்புலியூரில் உடையவர் வடதளி என்னும் திருக்கோயிலில் எழுந்தருளியுள்ள சிவ பெருமானுரைக் களிப்பினை உண்டாக்கத்தக்க உயர்ச்சியால் காண்பதற்குத் தக்கதான செல்வத்தினையுடைய சீகாழிப் பதியில் தோன்றிய திருஞானசம்பந்தன் (பாடிய) அருளை

விளைவிக்கின்ற திருப்பாடல்கள் பத்தும் வல்லவர்கள் என்றும் அழியாத இன்பத்தைத் தருகின்ற சிவலோகத்தில் நிலையாக இருப்பர்.

மேதிகள் — எருமைகள்; இவைகள் வயலுள் மேயும் போது அங்குள்ள பவளங்களைத் தங்கள் கால்களால் இடறுகின்றன. அங்ஙனம் இடறப்பட்டுப் பவளங்கள் மேலும் ஒளிதருகின்றன.

களிதரு—களிப்பினைத் தருகின்ற.

நிவப்பு— உயர்ச்சி, காண்டகு:— காண் + தகு —காணத் தக்க.

அளிதரு—சிவபிரானின் கருணையை விளைவிக்கின்ற

அமரலோகம்—இச்சொல் சாமானியப் பொருளான தேவருலகத்தை இங்குக் குறிக்காது. என்றும்அழியாத சிவலோகத்தினையே சிறப்புப் பொருளாகக் குறிக்கும்,

சிவம்

---

கரியாய் விடாமல் கரியாய் மொழியும் !

**வானும் புகழ்புகலி மன்னன் தொடர்பொன்று**
**தேனுந்து இதழியோன் சீரேடு — தானுங்**
**கரியாய் மொழியுங் கரியாய் விடாமல்**
**எரியார் அழல்வீழ்ந் தெழுந்து.**

—நால்வர் நான்மணிமாலை: **25.**

தேவர்களும் துதிக்கும் திருப்புகலியில் அவதரித்த திருஞானசம்பந்தர் அருளிய திருப்பதிகம் எழுதிய ஒரு ஏடு, எரியில் வீழ்ந்து கரியாகி (சாம்பலாகி) விடாமல் பசுமையுற்று விளங்கித் தேனொழுகும் கொன்றை மலர் மாலையினையணிந்து சிவபிரானுரைது பரத்துவ நிலைக்குக் கரியாக (சாட்சியாக) நின்று சாற்றும். இது சமணர் நெருப்பில் இட்ட அவர்களது ஏடு சாம்பலாகி, திருஞானசம்பந்தர் இட்ட ஏடு சாம்பலாகாது பச்சைப் பசேலென்று விளங்கிப் பரமரது பரத்துவத்தை நிரூபித்ததாகும் என்று விளக்கியவாறு.

உ
சிவமயம்

# சண்டேசுர நாயனுர்

[திருச்சேய்ஞலூர் திருப்பதிகத்தில் பீரடைந்த எனத் தொடங்கும் பாடலில் அடங்கிய வரலாறு.]

சோழநாட்டில் முருகப் பெருமான் சிவலிங்கம் ஸ்தாபித்து வழிபட்டபடியால் திருச்சேய்ஞலூர் என்ற சிறந்த பெயர் பெற்ற ஒரு ஊர் உள்ளது. அவ்வூரில் திருநீற்று நெறியில் அன்பு கொண்ட அந்தணர்கள் வாழ்ந்து வந்தனர். கண்ணுக்கு ஒளியும், கருத்துக்கு ஐந்தெழுத்தும், விண்ணுக்கு மழையும், வேதத்துக்கு சைவமும் பயனுவது போல மண்ணுலகிற்குப் பயனுக அமைந்த இப்பதியில் அந்தணர் குலத்திலே காச்யப கோத்திரத்திலே எச்சதத்தன் என்பவன் ஒருவன் இருந்தான். அவன் மனைவி பவித்திரை என்பவள். அவர்களிடத்திலே வேதியர் குலம் சிறக்கவும் சைவமாதவம் வளரவும் விசாரசருமர் என்பவர் அவதரித்தார். ஐந்தாண்டுகள் நிரம்பியதும் கல்வி பயிலத் தொடங்கிய அவருக்கு முற்பிறப்பில் பெற்றிருந்த அறிவின் தொடர்ச்சியினுல் வேத ஆகமங்களின் அறிவு மிகுந்து விளங்கலாயிற்று. இந்நிலையில் அவருக்கு ஏழு வயது ஆனதும் அந்தணர் குல மரபுப்படி பெற்றோர்கள் உபநயனம் செய்வித்து வேதங்களை ஓதுகின்ற செயலையும் தொடங்கி வைத்தனர். மறையோரதிசயிக்கும் வண்ணம் அறிவுத் திறன் பெற்ற விராசசருமர் அளவில்லாத கலைகளின் பொருள்களுக்கெல்லாம் எல்லையாவது தில்லைக்கூத்தனின் ஆடும் கழலேஎன்று தெளிந்தார். நடமேபுரியும் சேவடியார் நம்மை உடையார் என்னும் சிந்தனை எப்பொழுதும் அவர் சிந்தையில் இருந்து வந்தது.

இத்தகைய சிறப்பு மிக்க விசாரசருமர் ஒரு நாள் தன்னுடன் பயிலும் அந்தணச் சிறுவர்களுடன் வீதி வழியே

சென்று கொண்டிருக்கையில் பசுக்கள் கூட்டத்துடன் சென்ற ஒரு பசு இடையனைக் கொம்பினால் முட்டச் சென்றது. உடனே அவன் சிறிதும் கூசாமல் தன்கைக்கோலினால் அப் பசுவினை நன்கு அடித்தான். அதனைக் கண்ட விசாரசருமர் மிகுந்த இரக்கம் கொண்டு அப்பசுவினை அடிபடுவதினின்றும் தடுத்து இடையனைக்கோபித்துப் பிறகு அருள்செய்வாராய்ப் பசுக்களின் பெருமைகளை எல்லாம் பலவாறு நினைந்து இனி இப்பசு நிரையை மேய்க்கும் தொழிலை விட்டு விடுக. நானே அவற்றினை மேய்ப்பேன் என்று கூறினார்.

விசாரசருமர் சிந்தையில் கொண்ட பசுவின் பெருமை கள். அவை எல்லா உயிர்களைக் காட்டிலும் சிறந்த பெருமை உடையன. உலகின் புண்ணிய தீர்த்தங்கள் அனைத்தும் வந்து பொருந்துவன. பசுக்களின் அங்கங்களில் தேவர்களும், முனிவர்களும் தங்கியுள்ளனர். சிவபெருமானார்க்கு திரு மஞ்சனத்திற்குரிய பஞ்சகவ்யம் தரும் பெருமையினை உடையன. திருநீற்றிற்குரிய கோமயத்தினைத் தருவன. சிவ பெருமானின் வாகனமான இடபதேவரின் குலத்தைச் சேர்ந்தன. இத்தகைய பசுக்களை மேய்ப்பதை சிவபெரு மானின் திருவடியை வழிபடுவதற்கு உரிய நெறியாகும் என்ற துணிவுடன் செய்யலானார். மிகுந்த அன்புடன் பசுக் கூட்டங்கள் விசாரசருமரால் நன்கு பாதுகாக்கப்பட்டதால் அவை மிக்க அழகோடு விளங்கி முன்னையினும் நிறையப் பாலினைச் சொரிந்தன.

பசுக்கூட்டங்கள் மிக்க அன்புடன் விசாரசருமரைக் காணும் போது அன்புடன் உருகி, மடிசுரந்து தாமாகவே பாலினைப் பொழிந்தன. இதனைக் கண்ட விசாரசருமர் அந்தப்பால் சிவபெருமானுக்குத் திருமஞ்சனம் ஆகும் சிறப் பினை நினைந்து சிவபூஜையில் முயலலானார். மண்ணியாற்றங் கரையில் ஆத்தி மரத்தின் கீழ் சிவலிங்கம் அமைத்தார். காட்டிலே கிடைக்கின்ற மலர்களைக் கூடைகளில் கொண்டு வைத்தார். பிறகு நல்ல புதிய மண்குடங்களை எடுத்துக்

கொண்டு பசுக்களிடம் சென்று ஒரு பசுவுக்கு ஒரு காம்பாக மடியைத் தொட்டார். பசுக்கள் குடங்கள் நிறைய பாலைப் பொழிய அதைக்கொண்டு தாமமைத்த மணல் இலிங்கத்திற்குத் திருமஞ்சனம் செய்து வழிபடலானார். இவ்வாறு இறைவருக்குப் பாலைக் கொடுத்துவந்த பசுக்கள் வீட்டுக்குச் சென்று முன்போலவே குறைவின்றிப் பாலைக் கொடுத்து வந்தன.

இவவாறு நிகழ்ந்து வருகையில் தற்செயலாக இதனைக் கண்ட அயலான் ஒருவன் பசுக்களுக்கு உரியவர்களை அணுகி விசாரசருமர் பாலினை வீணாக மணலில் கொட்டி வீணாக்குவதாகப் பழி கூறினான். அதனைக்கேட்ட பசுக்களுக்கு உரிய அந்தணர்கள் விசாரசருமரின் தந்தையிடம் "உனது மகன் பசுக்களை அன்புடன் மேய்க்கின்றவன் போல் நடித்து, அவற்றின் பாலினைக் கறந்து மணலில் கொட்டுகிறான்" என்று கூறினர். எச்சதத்தன் பயந்து தனது மகனால் இப்பழி வந்ததே என்று வருந்தி இதனைத் தானே நேரில் அறிய முற்பட்டான்.

மறுநாள் விசாரசருமர் பசுக்களை மேய்க்கச் செல்லும் போது அவர் அறியாது தானும் பின்சென்று குராமரம் ஒன்றின் மேல் ஏறி மறைந்து இருந்தனன். வழக்கம்போல விசாரசருமர் தனது சிவபூஜையை ஆரம்பித்தவுடன் தன் மகனாரின் செயலைக் கண்ட எச்சதத்தன் மிக்க வெகுண்டான். உடனே இறங்கி வந்து தன் கைக்கோலினால் விசாரசருமர் முதுகில் அடித்தான். கொடிய மொழிகள் பல கூறினான். இச்செய்கைகள் எதனையும் உணராது விசாரசருமர் பாலபிடேகம் செய்வதிலேயே ஈடுபட்டிருந்தார். எச்சதத்தன் மேலும் கோபம் கொண்டு பாற்குடங்களைத் தனது காலினால் இடறினான். இந்நிலையில் விசாரசருமர் பாலினை இடறியது யாரெனத் திரும்பிப் பார்த்து தந்தை என்று அறிந்தும் அதனைப் பொருட்படுத்தாமல் இந்தப் பாதகத்தினைத் தண்டிக்க எச்சதத்தன் கால்களைத் துண்டிக்கக் கருதி அருகில் கிடந்த ஒரு கோலினை எடுத்தார்.

அக்கோல் அவருக்கு மழுவாக மாற, அதனுல் தந்தையின் இரண்டு தாள்களையும் அவர் வெட்டி வீழ்த்திஞர். எச்ச தத்தன் கீழே விழுந்து இறந்தான்.

விசாரசருமர் முன்போல் பூசனை புரிவதில் ஈடுபட்டார். விசாரசருமரின் பூசனைக்கு மகிழ்ந்த சிவபெருமான் உமா தேவியாரோடு விடைமீது ஏறி முனிவர்களும், தேவர்களும் துதிக்கும்படி எழுந்தருளி வந்தார். தம்மை வணங்கின விசாரசருமரைத் தமது திருக்கரங்களால் எடுத்து ''உன்னைப் பெற்ற தந்தையின் கால்களை நம்பொருட்டாக வெட்டி இறக்கச் செய்தாய். ஆதலின் நாமே உனக்கு அடுத்த தந்தை ஆயினேம்'' எனத்தழுவி உச்சி மோந்தார். சிவ பெருமானுடைய திருக்கரங்களால் தீண்டப்பட்டு மிக்க ஒளியுடன் விளங்கிய விசாரசருமரைத் தொண்டர்களுக் கெல்லாம் தலைவராக்கி ''நாம் உண்ட பரிகலமும், உடுப் பனவும், சூடுவனவும் ஆகிய அனைத்தும் உனக்கே உரிமை யாகும்படிச் சண்டீசன் எனும் பதவியைத் தந்தோம்'' என அருளிச்செய்து தனது சடைமுடி மீதிருந்த கொன்றை மலர் மாலையினை அவருக்குச் சூட்டி அருளினுர். விசாரசருமரும் சண்டேசுர நாயனுராகிச் சிவபெருமானை வழிபட்டுச் சண்டீசப் பதவியை அடைந்தார். சண்டேச நாயனுரால் கால்கள் வெட்டப்பட்டு இறந்த எச்சதத்தன் சிவபெரு மானது அருளினுல் தனது பிழையினின்றும் நீங்கித் தனது சுற்றத்தாருடனே திருக்கயிலாயத்தினை அடையும் பேறு பெற்ருன். சிவனடியார்கள் என்னென்ன செய்கிருர்களோ அவையனைத்தும் தவமே தவிர தவருகக் கருதப்பட மாட்டாது.






உ

சிவமயம்

சிவனுண்டு பயமில்லை

# திருப்பாடல் முதற்குறிப்பகராதி



திருப்பாடல் முதற்குறிப்பகராதி முற்றிற்று.

உ

சிவமயம்

சிவனுண்டு பயமில்லை

## வாழ்த்து

திருச்சிற்றம்பலம்

வாழ்க அந்தணர் வானவர் ஆனினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயதெல்லாம் அரன் நாமமே
சூழ்க வையகமும் துயர் தீர்கவே

திருச்சிற்றம்பலம்

—திருஞானசம்பந்தர் அருளியது

---

உ

சிவமயம்

சிவனுண்டு பயமில்லை



**யத்யத் கர்ம கரோமி**

**தத்ததகிலம்**

**சம்போ தவாராதனம்**

Printed at : Elango Achukoodam, 166, R. H. Rd., Ms-4.